# கல்கி

சோபகிருது. தை 20 ★ பிப்ரவரி 2

## பொருளடக்கம்



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



பட விளக்கம் 20ம் பக்கம் பார்க்க


நல்ல வர்ஜீனியாப்
புகையிலை என்றால்
ஒரு நல்ல சிகரெட்டு
பனாமா
ஒரு நல்ல சிகரெட்டு
Panama
20
CIGARETTES
Specially blended for a cool and pleasant smoke from selected Virginia Tobacco leaves.
விசேஷக் கலவை செய்வோர்,
கோல்டன் டுபாக்கோ கம்பெனி பிரைவேட் லிட்,
பம்பாய்.56
பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப்பெரியது



மலர் 23 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 27

# மகானை மறக்கலாமா?

காந்தி அடிகள் அமரரான நாளை சர்வோதய தினம் என்கிறோம். 'சர்வ உதயம்' என்று பெயரிட்டாலும் இன்று அவர் வகுத்த தர்மங்கள் எல்லாம் மறக்கப்பட்டு அஸ்தமித்தாற் போன்ற இருளே பரவி வருகிறது.

காந்திஜி விரும்பிய ஆத்மிக உணர்வு, இறைப்பற்று, தனிமனிதர் சுதந்திரம், கிராம முன்னேற்றம், எளிய வாழ்வு இவையெல்லாம் அழிவுபட்டு வருவது நீண்ட நாட்களாக நாம் கண்டுவரும் சோகக் கதையாகும். இவையெல்லாம் ஆட்சியாளர் செய்துவரும் காரியங்களின் பலன்கள். இவற்றுக்கெல்லாம் மேலாக மக்களே இப்போது மகாத்மாவின் உன்னத ஆணையை மீறி நடந்து விட்டார்கள்! இந்து-முஸ்லிம் ஒற்றுமைக் காகவே அவர் பிராணத் தியாகம் செய்தார். அந்தத் தியாகத்தின் மகத்துவத்தால் ஒற்றுமையும் ஏற்பட்டது. ஆனால் தற்போது கிழக்குப் பாகிஸ்தானிலும், மேற்கு வங்காளத்திலும் நடைபெற்ற கோரங்களை என்னென்பது? பாகிஸ்தானின் செயல்களுக்கு நாம் பொறுப்பில்லை. ஆனால் வங்காளத்தில் நம் தரப்பில் நடந்துள்ள விபரீதங்களை எண்ணி வேதனைப்படாதிருக்க இயலுமா?

அடிகளைக் குறித்து அமரகவி பாடினார்:

> தன்னுயிர்போலே தனக்கழிவெண்ணும் பிறனுயிர் தன்னையும் கணித்தல்;
> மன்னுயிரெல்லாம் கடவுளின் வடிவம் கடவுளின் மக்களென்றுணர்தல்;
> இன்ன மெய்ஞ்ஞானத் துணிவினை மற்றாங்கு இழிபடு போர், கொலை, தண்டம்
> பின்னியே கிடக்கும் அரசியலதனில் பிணைத்திடத் துணிந்தனை, பெருமான்!

அதற்கு நேர்மாறாகச் செல்ல இன்று நாம் மனம் கொள்ளலாமா? 'மெய்ஞ்ஞானத் துணிவு வேண்டாம்; போரும், கொலையும், தண்டமும் பின்னிய அரசியல் தான் வேண்டும்' என்று கருதலாமா? மகாத்மாவின் உபதேசம் எந்தத் துறையிலும் நமக்கு வேண்டாமா? அவரை அடியோடு மறந்துவிட வேண்டியதுதானா?

மத்திய மந்திரிகள் கலகப் பிரதேசங்களுக்குப் போகிறார்கள். ஆனால் நவகாளியில் தனியாகச் சென்று அன்பைப் பரப்பிய புண்ணியமூர்த்தியின் ஆத்ம பலம் இல்லாதவர்களால் மக்களின் மனத்தை எப்படி மாற்ற முடியும்? ஆண்டவனை நினையாமல் அன்பை உண்டாக்க முடியுமா? 'மன்னுயிரெல்லாம் கடவுளின் வடிவம், கடவுளின் மக்கள்' என்று உணராமல், அரசியல் வாசகங்கள் மூலம் சகோதரத்துவத்தை எப்படி நிலைநாட்ட முடியும்?

சுதந்திர இந்தியாவில் எத்தனையோ அரும் செல்வங்களையெல்லாம் அரசாங்கத்திடம் பறிகொடுத்து விட்டோம். தெய்வ பக்தியையும் பறிகொடுத்துவிட வேண்டாம். இந்த ஒரு விஷயத்திலாவது ஆட்சியாளர்கள் மகாத்மாவை மறக்காமல் இருப்பார்களாக! மக்களை நன்னெறியில் ஊக்க வேண்டும் என்றும், கடவுள் பக்தி மூலமே அவ்வாறு ஊக்கமுடியும் என்றும் புரிந்துகொண்டு, இந்த சர்வோதய தினத்தன்று அன்பும் அமைதியும் பெருகப் புதுமுயற்சி எடுப்போமாக!

# நந்தரின் வெற்றுவேட்டு!

**பா**ரதத்தின் உள் துறை மந்திரியாகிய ஸ்ரீ குல்ஜாரிலால் நந்தர் லஞ்ச ஒழிப்புப் பணியில் பிரமாதமாக ஈடுபட்டு விட்டார்! 'கொடுப்பவர்கள், வாங்குபவர்கள் இரு சாராரையும் கடுமையாகத் தண்டிப்பேன்' என்கிறார்.

இன்று நாட்டின் நற்பெயருக்கு ஏற்பட்டுள்ள களங்கத்துக்கு முக்கியமான காரணம் சின்ன சிப்பந்திகளும், சேவகர்களும் வாங்குகிற லஞ்சமல்ல. மந்திரிமார்களும், காங்கிரஸ் கட்சிக்காரர்களும் பெரிய உத்தியோகஸ்தர்களும் கண்ட்ரோல் முறைகளின் கீழ் பாரபட்சம் காட்டி ஒரு சிலருக்கு மட்டும் தொழில், வியாபார உரிமைகள் தந்து, அதன்மூலம் தங்களுக்கோ கட்சிக்கோ அநீதமான முறையில் ஆதாயம் தேடிக் கொள்வதுதான் இன்று லஞ்சப் பேய் தலை விரித்தாடுவதற்குக் காரணம். லைசென்ஸ் — பெர்மிட் முறைகள் ஒழியாத வரையில் இவ்வாறு சலுகை ஆட்சி நடத்தி ஊழலை வளர்க்கும் போக்கு அழியாது. நந்தரின் பிரம்மப் பிரயத்தனங்கள் கேலிக் கூத்தாகவே முடியும்.

லஞ்சம் என்ற பெயரில் வராமலே தகிடுதத்தமாகக் காங்கிரஸ் தலைவர்கள் பெறுகிற நன்கொடைகளைத் தடுக்க நந்தரின் திட்டம் என்ன செய்ய முடியும்? இரண்டே உதாரணங்களைப் பார்ப்போம்:

பஞ்சாப் முதன் மந்திரி திரு கெய்ரோனுக்கு ஒரு சமயம் அளிக்கப்பட்ட 51,000 ரூபாய் பண முடிப்பை அவர் ஸ்ரீமதி இந்திரா காந்தியின் ஜனஹித நிதிக்கு அளித்ததாக வதந்தி உலவுகிறது. நேரு அவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட 'நாஷனல் ஹெரால்ட்' பத்திரிகையின் அபிவிருத்திக்கு இந்தத் தொகை பயனுக்கப்பட்டதாகவும் சொல்லப்படுகிறது. பஞ்சாப் ராஜ்ய முதன்மந்திரிக்கும் இந்தப் பத்திரிகைக்கும் அரசாங்க ரீதியில் என்ன சம்பந்தம் உண்டு? அவருக்கு அளிக்கப்பட்ட பண முடிப்பை இந்த சஞ்சிகைக்குப் பயனுக்குவது எந்த நியாயத்தில் சேரும்? இவற்றைப் போன்ற சிக்கல்களைத் தீர்க்க நந்தரின் திட்டத்தின் மூலம் முடியுமா?

இன்னொர் உதாரணம்: 'எகனமிக் ரிவ்யூ' என்பதாகக் காங்கிரஸ் பத்திரிகை ஒன்று நடந்து வருகிறது. மாதமிரு முறை வெளியாகும் இந்தப் பத்திரிகையின் செலாவணி மிகக் குறைவு. 3,500 பிரதிகளுக்கும் குறைவாகவே அச்சிடப்படுகிறது. காங்கிரஸ் கட்சியின் கிளை அலுவலகங்களுக்குத்தான் அநேகமாக இந்தப் பத்திரிகை போகிறது. ஆனால் இந்தப் பத்திரிகைக்காக விளம்பரம் என்ற பெயரில் பெரிய முதலாளிகளிட மிருந்து இரண்டு லட்ச ரூபாய் வசூலித்திருக்கிறார்கள்! காங்கிரஸ் மகாநாட்டின் போது பத்திரிகை வெளியிட்ட இதழில் பின் அட்டைக்கு மட்டுமே விளம்பரக் கட்டணம் ரூ. 50,000! அட்டையின் உட்புறங்களுக்கு முப்பதி




கழுதை கெட்டால் குட்டிச்சுவர்

னாயிரமும், நாற்பதினாயிரமும் வசூலித்திருக்கிறார்கள்! அற்பமான செலாவணியுள்ள ஒரு பத்திரிகைக்கு இவ்வளவு பெரிய தொகைகளை விளம்பரக் கட்டணமாகத் தருகிறார்கள் என்பதை யாரேனும் ஒப்புக் கொள்ள முடியுமா? ஸ்ரீ நந்தர் அவர்களே தம் இதயத்தில் கையை வைத்துக் கொண்டு அப்படிச் சொல்வாரா?

கட்சிப் பத்திரிகையான 'எகனாமிக் ரிவ்யூ'வுக்கு மத்திய சர்க்காரும், ராஜ்ய சர்க்கார்களும் 35,000 ரூபாய்க்கு விளம்பரம் செய்துள்ளனராம். இது லஞ்ச ஊழலைச் சேராதா? நந்தரின் லஞ்ச ஒழிப்புத் திட்டம் இம்மாதிரியான ஊழல்களைத் தீர்க்க என்ன செய்ய முடியும்? கொடுக்கிறவர் வாங்குகிறவர் இருவரையும் தண்டிப்பதாகக் கூறும் அவர் இதுபோன்ற அக்கிரமங்களில் என்ன செய்யப் போகிறார்?

லஞ்சத்தை ஒழிக்க வேண்டுமென்று ஆட்சியாளர்கள் விரும்பினால் அதற்கு உபாயம் ஒன்றே ஒன்றுதான். லைசென்ஸ் - பெர்மிட் முறையை ஒழிப்பது. காங்கிரஸ் ஆட்சியில் இந்தத் தீவிர நடவடிக்கையை எதிர்பார்ப்பது பொருளற்ற காரியம். ஆனபடியால், இந்த லைசென்ஸ் - பெர்மிட் முறையை ஒப்புக்கொண்டே இதற்குள் தூய்மையைக் காணவேண்டுமெனில் அதற்கு வழி சென்ற இதழில் ராஜாஜி கூறியதுபோல் ஒரு கட்சிச் சார்பில்லாத போர்டு அமைத்து. அதன்மூலம் லைசென்ஸுகளையும் பெர்மிட்டுக்களையும் அளிப்பது தான். சர்க்காருக்குப் பயப்படாமல் சுதந்திரமாகச் செயல்படும் சக்தி வாய்ந்த அமைப்பாக இந்த போர்டு இருத்தல் வேண்டும்.

இவ்வாறு ஒரு பெர்மிட் - லைசென்ஸ் நிர்வாக போர்டு அமைக்கக் காங்கிரஸ் விரும்பாமற் போனால் அதுவே அந்தக் கட்சியின் லஞ்ச மனப்பான்மைக்குச் சிறந்த அத்தாட்சியாக இருக்கும். எதிர்க் கட்சிகள் இந்த அம்சத்தை மக்களுக்கு வலியுறுத்திக் காட்டினால் அதுவே காங்கிரஸின் வீழ்ச்சிக்கும் பெரும் உதவி புரியும்.

## ராஜாஜியின் வேண்டுகோள்

**முனிஸிபல் ஆட்சியில் அரசியல் கட்சிகளைப் புகுத்தப்படாது என்பது சுதந்திரக் கட்சியின் அபிப்பிராயம் என்பது உறுதி. ஆயினும் பிற கட்சிகள் முக்கியமாகக் காங்கிரஸ் கட்சி, பகிரங்கக் கட்சி மனப்பான்மையுடன் புகும்போது. சுதந்திரக் கட்சியின் சார்பிலும் சிலர் நிற்பதும், காங்கிரஸ் சூழ்ச்சிகளை எதிர்ப்பதும் அவசியமாகிவிட்டது. காங்கிரஸ் கம்யூனிஸ்ட் கட்சிகளின் ஐக்கியத்தையும் இப்போது காண்கிறோம். பல முனிஸிபாலிடிகளில் தற்போது சுதந்திரக் கட்சி அபேட்சகர்களும், தி. மு. கழக அபேட்சகர்களும் ஒன்று சேர்ந்து காங்கிரஸ் அபேட்சகர்களையும் கம்யூனிஸ்ட் கட்சி அபேட்சகர்களையும் எதிர்த்து நிற்கிறார்கள்.**

**மக்கள் காங்கிரஸுக்கும் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் நல்ல தோல்வி கொடுத்து அதிகாரத்திலிருக்கும் காங்கிரஸுக்கு அடக்கம் கற்பிப்பார்களாக.**

# இலங்கையில் எதிர்க் கட்சிகள்

— கொழும்பு, ஜனவரி 22உ

இவ்வாரம் பார்லிமெண்ட் சபைக்குப் பொறளைத் தொகுதியில் இடைத் தேர்தல் நடந்தது. டாக்டர் டி. சில்வா என்ற சுயேச்சை அபேட்சகர் மாரடைப்பினால் காலமாகியதையொட்டிப் பார்லிமெண்டில் அவருடைய ஸ்தானத்தை நிரப்புவதற்காக இத் தேர்தல் நடைபெற்றது. இதில் காலஞ்சென்ற அங்கத்தினரின் மனைவியான ஸ்ரீமதி கமலா டி சில்வா ஒரு சுயேச்சை அபேட்சகராகப் போட்டியிட்டார். அவருக்கு ஆளும் கட்சி ஆதரவு அளிப்பதாக வாக்களித்திருக்கிறது என அவர் கூறினார். ஆனால் தேர்தல் தொகுதியின் நாடியைப் பிடித்துப் பார்த்த ஆளும்கட்சி, யாரையும் ஆதரியாமல் கௌரவமாக ஒதுங்கி யிருந்து விட்டது. இரண்டு வாரங்களுக்கு முன்னால் திக்கவெரெட்டியா என்ற தொகுதியில் பார்லிமெண்ட் இடைத் தேர்தல் நடைபெற்ற பொழுது அங்கு ஆளும் கட்சி படுதோல்வி யடைந்தது. எனவே இவ்வாரம் நடந்த இடைத் தேர்தலில் ஆளும் கட்சி நேரடியாக ஈடுபடா விட்டால்கூட ஓர் அபேட்சகரை ஆதரித்து அந்த அபேட்சகர் தோல்வியடைந்திருந்தால் அதன் மானமே போயிருக்கும். ஆளும் கட்சி ஒதுங்கி யிருந்து தனது கௌரவத்தைக் காப்பாற்றிக் கொண்டது. அதன் ஆதரவைப் பெற்றிருப்பதாகச் சொல்லிக்கொண்ட ஸ்ரீமதி கமலா டி சில்வா கட்டுப் பணத்தை (டிபாஸிட் தொகையை)யே இழந்து விட்டார்.

முதலாளித்துவக் கட்சியான ஐக்கிய தேசியக் கட்சிக்கும் இடதுசாரி ஐக்கிய முன்னணிக்கும்தான் இங்கு நேரடியான மோதல் ஏற்பட்டது. இடதுசாரி ஐக்கிய முன்னணி அபேட்சகர் ஸ்ரீமதி விவியன் குணவர்த்தன 422 வோட்டுகள் அதிகப்படியாகப் பெற்று வெற்றியடைந்தார். இத்தேர்தல் முடிவினால் பார்லிமெண்டில் ஆளும் கட்சியான ஸ்ரீமதி பண்டாரநாயகாவின் ஸ்ரீ லங்கா சுதந்திரக் கட்சியின் நிலைமை மோசமடைந்திருப்பது கவனிக்கத் தக்கது. இலங்கைப் பார்லிமெண்




அரசியல் அம்மானை

டில் மொத்தம் 156 அங்கத்தினர்கள் உண்டு. இவர்களில் ஆறு பேர்கள் நியமன அங்கத்தினர்கள். மற்றவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். அரசாங்கக் கட்சியில் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் இப்போது 73 பேர்கள் மட்டுமே இருக்கிறார்கள். ஆறு நியமனப் பிரதிநிதிகளையும் சேர்த்தால் ஆளும் கட்சியின் கூட்டு பலம் 79. எதிர்க் கட்சிகளிலோ மொத்தம் 77 தெரிவு செய்யப்பட்ட அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். எனவே ஆளும் கட்சியின் தற்போதைய மெஜாரிட்டி இரண்டே இரண்டு வோட்டுகள்தாம். இந்த இரண்டு வோட்டுகளும் கட்சிப் பற்று இல்லாமல் அரசாங்கத்தின் பக்கமாக இதுவரை வோட்டுக் கொடுத்து வரும் திரு ஆர். ஜி. சேனநாயகா, யாழ்ப்பாணப் பிரதிநிதி திரு ஆல்பிரட் துரையப்பா ஆகிய இருவருடைய வோட்டுகள். பார்லிமெண்டில் ஆளும் கட்சியின் நிலை இன்று போல் வேறு என்றும் இவ்வளவு மோசமாக இருந்ததில்லை. ஆகவே அடுத்தபடியாக என்ன நடக்கும் என்பதை யாரும் சொல்ல முடியாது.***

சபாநாயகர் திரு ஆர். எஸ். பெல்போல என்பவர் பாரபட்சமாக நடந்தார் என்ற புகாரின் மீது அவரிடம் நம்பிக்கை இல்லை என்ற ஒரு தீர்மானத்தை எதிர்க்கட்சிகள் கூட்டாகக் கொண்டு வந்தன. அத்தீர்மானம் தோல்வியடைந்து விட்டது என்றாலும் சகல எதிர்க் கட்சி அங்கத்தினர்களும் தீர்மானத்தை ஆதரித்து ஓட்டுக்கொடுத்தமையால் அவர்மீது எதிர்க் கட்சிகளுக்கு நம்பிக்கை இல்லை என்பது தெளிவாகிறது. சபாநாயகர் பதவியை வகிப்பவர் எல்லாக் கட்சிகளுடைய நம்பிக்கையையும் பெற்றவராக இருக்க வேண்டுமாதலால் அந்தத் தீர்மானம் வந்தகடந்த இரண்டு மாதகாலமாக ஸ்ரீ அவர் சபைக் கூட்டத்துக்கு வரவில்லை; சபாநாயகர் பதவியை ராஜிநாமா செய்யவுமில்லை. உதவி சபாநாயகரே சபைக் கூட்டங்களுக்குத்தலைமை தாங்குகிறார். இது பார்லிமெண்டரி முறைக்கு அவக்கேடு என்றும் சபாநாயகர் உடனே ராஜிநாமா செய்ய வேண்டுமென்றும் தேசியப்பத்திரிகைகளெல்லாம் ஒருமுகமாக வலியுறுத்தியும்கூட சபாநாயகர் பதவி துறப்பதாயில்லை. எனவே அவருடைய வோட்டு இனி சர்க்காருக்குக் கிடைக்குமா என்பது சந்தேகமானதே. ஆளும் கட்சியைச் சேர்ந்த ஒருவர் சபாநாயகராகிவிட்டால் அந்த வோட்டும் அரசாங்கத்துக்குக் கிடைப்பதற்கில்லை. இவைகளையெல்லாம் அவதானிக்கும் அரசியல் விமரிசகர்கள் எந்த நிமிடமும் திடீர்ப் பொதுத் தேர்தல் நடைபெறலாம் என்று ஜோஸ்யம் கூறுகிறார்கள்.***

கொழும்பு துறைமுகத்தில் சுமார் இரண்டு மாதங்களுக்கு அதிகமாக நடைபெற்ற கட்டுப்பாடான வேலைநிறுத்தம் கடந்த வாரம்தான் முடிவுக்கு வந்தது. இந்த வேலைநிறுத்தத்தை அரசாங்கம் பல தினங்களுக்கு முன்னரே முடிவுக்குக் கொண்டு வந்திருக்கலாம். துறைமுகக் கார்ப்பொரேஷனில் செய்யப்பட்ட சில நியமனங்களைத் தொழிலாளர் யூனியன் கடுமையாக ஆட்சேபித்து அந்த நியமனங்களைப் பற்றி விசாரிக்க ஒரு கமிட்டியைப் பிரதம மந்திரி நியமிக்க வேண்டும் என்று கோரியது. இந்த யோசனையை அரசாங்கம் ஆரம்பத்திலேயே ஏற்றுக் கொண்டிருந்தால் சுங்கத் தீர்வை மூலமாக அரசாங்கத்துக்குப் பல கோடி ரூபாய் நஷ்டம் ஏற்பட்டிராது. ஏற்றுமதி இறக்குமதியாளர்களுக்குப் பெரு நஷ்டமும் ஏற்பட்டிராது. அரசாங்கம் இழுத்தடித்து விட்டுக் கடைசியாக ஒரு விசாரணைக் கமிட்டியை நியமிக்க ஒப்புக் கொண்டது. தாமதத்துக்குக் காரணமான தேசியப்போக்குவரத்து இலாகா மந்திரி திரு சமர வீராவைச் சர்க்காரிலிருந்து வெளியேற்ற வேண்டுமென எதிர்க் கட்சிகள் கோரியிருக்கின்றன.—ரஜனி

# போகிற போக்கில்...



காடாறு மாதம் நாடாறு மாதம் என்று ஆட்சி புரிந்த விக்கிரமாதித்த மகாராஜாவின் கதைகளை நாம் படித்திருக்கிறோம். அந்த விக்கிரமாதித்தனை வெல்லக் கூடிய வகையில் இன்றைய காங்கிரஸ் தலைவர்கள் நடந்து வருகிறார்கள். 'கா' திட்டப்படி பதவிகளை விட்டு வெளியேறிய திரு லால்பகதூர் சாஸ்திரி நான்கு மாதங்கள்கூட வெளியில் இருக்கவில்லை. திரும்ப முடிசூட்டிக்கொள்ள வந்துவிட்டார். இலாகா இல்லாத மந்திரி என்று அறிவிப்பு வந்து விட்டது. இலாகாக்கள் இவரைத்தேடிக் கொண்டு வர இனி அதிக காலம் ஆகாது. இப்படியாகக் 'கா' திட்டத்தின் வேலை கனஜோராக நடக்கிறது. நவீன விக்கிரமாதித்தர்கள் நீடூழி வாழ்க!

ஃ ஃ ஃ

காங்கிரஸ் தலைமைப் பதவி காலாவதி ஆன திரு சஞ்சீவய்யா தொழில் மந்திரியாக ஆகியிருக்கிறார். 'கா' இரண்டாவது திட்டம் வேலை செய்யத் தொடங்கி விட்டது என்பதற்கு இது ஓர் அடையாளம். இந்த இரண்டாவது திட்டம் புவனேசுவரத்தில் பிறந்தது என்பதை நண்பர்கள் அறிவார்கள். இதன்படி ஸ்தாபனத்தில் இருப்பவர்களும் கட்சியில் இருப்பவர்களும் அடிக்கடி இடம் மாறிக் கொள்ள வேண்டும் என்பது கருத்து. அதாவது இன்று காங்கிரஸ் கமிட்டியில் தலைவராக இருப்பவர் நாளை மந்திரியாக வருவார். அதே போல் மந்திரியாக இருப்பவர் காங்கிரஸ் தலைவராக ஆவார். இந்த ஏற்பாட்டைக் காணும் ரஷ்யக் கம்யூனிஸ்டுகள் சந்தோஷப்படுவார்கள். ஏனெனில், அங்குதான் கட்சிக்கும் அரசாங்கத்துக்கும் வித்தியாசம் கிடையாது. இருவரையும் சமஅந்தஸ்தில் வைத்துப் பூஜித்து வணங்குவது என்பது சம்பிரதாயம்.

ஃ ஃ ஃ

இந்தியாவில் இப்படியாகச் சர்வாதிகாரம் வளர்ந்துவரப் புவனேசுவரத்தில் ''ஜனநாயக சோஷலிஸம்'' என்றார்களே, அந்த ஜனநாயகம் என்னவாயிற்று என்று கேட்கலாம். அந்த ஜனநாயகம் இருக்கத்தான் செய்கிறது. ஆனால் அது 'அசைச் சொல்'லாக இருக்கிறது. அப்படியென்றால் அதற்கு அர்த்தமில்லை என்று பொருள். 'மைசூர் போண்டா' என்றால் எப்படி 'மைசூர்' என்பது அந்தப் போண்டாவில் அர்த்தமற்று இருக்கிறதோ, அப்படித்தான் ஜனநாயகமும். உண்மையில் இருப்பது சோஷலிஸம்தான்; அதுவும் ரஷ்ய மாடலில். நாளை பீகிங்குடன் இருக்கும் பிணக்குத் தீர்ந்து விட்டால் இந்த சோஷலிஸம் பீகிங் மாடலிலும் இருக்கும்!

ஃ ஃ ஃ

ஜான்ஸிபாரில் நூற்றுக்கணக்கான இந்தியர்கள் கொல்லப்பட்டார்கள் என்று செய்திகள் கூறுகின்றன. இதேநேரத்தில் டாக்காவில் ஆயிரத்துக்கும் மேற்பட்ட பேர்கள் கொலையாகி யிருக்கிறார்கள் என்று செய்திகள் வருகின்றன. இந்த ஆயிரத்தில் பெண்களும் குழந்தைகளும் ஏராளமாக இருக்கின்றனவாம். இந்தச் செய்திகளையெல்லாம் கேட்கும் பொதுமக்கள் துயரப்பட்டு 'ஆண்டவனே இதென்ன கொடுமை' என்கிறார்கள். ஆனால் இந்திய சர்க்கார் இச்செய்திகளைக் கண்டு பரபரப்படைந்ததாகத் தெரியவில்லை. அவர்கள் ஏன் இப்படி அசமந்தமாக இருக்கிறார்கள் என்றால் அதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. அதாவது புவனேசுவரம் தந்துள்ள தீர்மானங்களை எப்படி நிறைவேற்றுவது என்று யோசித்துக் கொண்டே இருக்கிறார்களாம். இந்த யோசனைக்கு முன்பு நூறு பேர் ஆயிரம் பேர் என்றெல்லாம் வரக் கூடிய செய்திகள் 'அற்பமாக' அவர்களுக்குத் தெரிகின்றனவாம். 'பெரியதாக' அவர்களுக்குத் தோன்றுவது ரைஸ்மில்களைச் சர்க்கார் எடுத்துக் கொள்வதுதானும். எனவே, அதுவரை ஏது வந்தாலும் போனாலும் அது செவிடன் காதுக்கு ஊதிய சங்குதான்! சந்தேகமில்லை!

— சிட்டுக்குருவி




**43**

சர்வேசுவரன் ஒருபக்கம் உலகனைத்திற்கும் பெரிதாக வளர்ந்து திருவிக்கிரமனாகிறான். மற்றொரு பக்கம் ஆலிலை மேல் சிறு குழந்தையின் வடிவமாகிறான். அவனுடைய வடிவத்தையாவது குணங்களையாவது ஆராய்ந்து தெளிந்து அறிதல் இயலாத காரியம். இந்த இயலாத காரியத்தை விட்டு விட்டுப் பகவானைப் பக்தியைக் கொண்டு. அதாவது ஆராய்ச்சியை விட்டு விட்டு. உள்ளத்திலே வை என்கிறார் ஆழ்வார்.

**நினைத்துலகில் ஆர்தெளிவார்**
**நீண்ட திருமால்**

[நீண்ட திருமால் நினைத்து உலகில் ஆர் தெளிவார் - திருவிக்கிரம அவதாரம் எடுத்த திருமாலை நம்முடைய மேதையைக்கொண்டு ஆராய்ச்சி செய்து பூரணமாக அறிய முடியாது.]

**அனைத்துலகும் உள்ஒடுக்கி**
**ஆல்மேல்—கனைத்துஉலவு**

**வெள்ளத்துஓர் பிள்ளையாய்**
**மெள்ளத் துயின்றானை**

[கனைத்து உலவு—பிரளய ஓசையுடன் பரந்து பெருகிய வெள்ளத்தில். ஆல்மேல் ஓர்பிள்ளையாய் — ஆலிலையின் மீது குழந்தையின் வடிவிலே. அனைத்துலகும் உள்ஒடுக்கி— மறைந்துபோன உலகங்கள் அனைத்தையும் வயிற்றிலே அடக்கிக்கொண்டு. மெள்ளத் துயின்றானை—மெள்ள. அதாவது ஏதும் நிகழவில்லை என்று தூங்குவதுபோல் கண் வளர்ந்த அந்தச் சர்வேசுவரனை.]

**உள்ளத்தே வைநெஞ்சே**
**உய்த்து**

[நெஞ்சே — மனமே. உள்ளத்தே உய்த்துவை — தியானித்து இதயத்தில் வைப்பாயாக!]

இறைவனுடைய மூர்த்தியையும் நிறைந்த ஆற்றலையும் அறிவினால் அளந்து காண்பது என்பது இயலாது. அந்தரங்க பக்தியோடு எம்பெருமானை உள்ளத்திற்குள் வைத்து அனுபவிப்பதே நமது செயல். அதைச் செய்வாயாக என்று மனத்திற்குச் சொல்கிறார் ஆழ்வார்.

**நினைத்துலகில் ஆர்தெளிவார்**
**நீண்ட திருமால்**
**அனைத்துலகும் உள்ளொடுக்கி**
**ஆல்மேல் — கனைத்துலவு**
**வெள்ளத்தோர் பிள்ளையாய்**
**மெள்ளத் துயின்றானை**
**உள்ளத்தே வைநெஞ்சே**
**உய்த்து!**

(அடுத்த இதழில் முடியும்)



உலகப்
பிரசித்திபெற்ற
தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக் குணமளிக்கும்

## பெப்ஸ் வில்லைகளை உட்கொண்டதால், பிராங்கைடிஸ் விரைவில் அகன்றது

தொண்டை, மார்பு உபாதைகளுக்கான பெப்ஸ் வில்லைகளை உட்கொண்டு தொண்டைப் புண், ப்ராங்கைடிஸ், இருமல் மற்றும் ஜலதோஷத்தை சீக்கிரம் நிவர்த்தி செய்து கொள்ளுங்கள். பெப்ஸ் வில்லைகளைச் சுவைத்து, குணமளிக்கும் ஆவி போன்ற அதன் சத்து வேலை செய்வதை உணருங்கள் . . . வேதனையைக் குறைக்கவும் கிருமிகளை அகற்றவும் உதவியளிக்கிறது.




## பெப்ஸ்

தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணம் அளிக்கும்
வில்லைகள்

எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

ஸி. இ. புல்போர்ட (இந்தியா) பிரைவேட் லிட்.

சென்னை ராஜ்யத்திற்கு பூரண வினியோகஸ்தர்கள் :
மெஸர்ஸ் மோதி & கம்பெனி, சென்னை - 1




**THANGABASPAM TOBACCO**

**KARAIKUDI.**

BS

# நடப்பவைதான் நம்புங்கள்

“சமீப காலம் வரை ஐரோப்பியர்கள் பலர் ‘மலையாளம் என்றால் தென்னிந்தியா’ என்று நினைத்துக் கொண்டிருந்தார்கள்” என்று டெல்லியில் நடைபெற்ற கீழ்த்திசை நிபுணர்கள் மகாநாட்டில் பேராசிரியர் டாக்டர் நோயல் தெரிவித்தார்.

“இது தவறு. உத்தியோகம், வியாபாரம் சம்பந்தப்பட்டவரை மலையாளம் என்பது உலகமேதான்” என்று கேரளவாசிகள் கூறுவது காதில் விழுகிறது.

ஃ ஃ ஃ

❋ வடக்கெல்லையில் இருக்கும் நம் காவலர்களுக்கு உதவியாக ராணுவ விஞ்ஞானிகள் ஒரு மிக முக்கியமான ஆராய்ச்சியில் ஈடுபட்டு வெற்றி கண்டிருக்கிறார்கள். சாதாரணமாகக் குளிர்காலத்தில் கார்களின் மோட்டார்கள் சுலபத்தில் கிளம்புவதில்லை. இஞ்சின் குளிர்ந்து விட்டது என்கிறோம். இங்கேயே அந்த நிலை என்றால் பல்லாயிரம் அடி உயரத்தில் இமயமலைச் சிகரங்களில் நீர் உறைகிற குளிரில் லாரிகளும் ஜீப்களும் சுலபத்தில் ‘ஸ்டார்ட்’ ஆகி விடுமா? இதற்காக விஞ்ஞானிகள் ஒரு புதுரக ரசாயன திரவத்தைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். சைபர் டிகிரி சென்டிகிரேடுக்கும் கீழே –20 டிகிரி சென்டிகிரேட்வரை சீதோஷ்ண நிலை குறைந்தாலும் கூடப் பதினைந்து கன சென்டிமீட்டர் அளவுள்ள இந்தத் திரவத்தின் உதவி கொண்டு மோட்டாரை ஐந்து தடவைகள் கிளப்பி விடலாம்!



ஃ ஃ ஃ

❋ வடக்குத் திசையில் தலைவைத்துப் படுக்கக் கூடாது என்று பெரியோர்கள் சொல்வார்கள். நாமும் அவர்கள் சொற்படி கேட்டு நடந்து வந்திருக்கிறோம். ஆனால் இதுவரைக்கும் இதற்கான காரணத்தை யாரும் கூறியதாகத் தெரியவில்லை. இப்போது பேராசிரியர் சுந்தர் பெக்கர் என்பவர் இதற்கு விளக்கம் கொடுக்க முன்வந்திருக்கிறார். காந்த ஊசி எப்போதும் வடக்குத்திசை நோக்கியே சுட்டிக் காட்டும் எனக் கண்டிருக்கிறோம் நாம். பூமியின் காந்த சக்தியால் மனிதர்களும் மிருகங்களும், ஏன், புழு பூச்சிகளும்கூடப் பாதிக்கப்படுகின்றன என்று இவர் கண்டுபிடித்திருக்கிறார். மனிதர்களில் சிலருக்கு இதனால் தலை சுற்றல் மயக்கம் வருமாம். வேறு சிலர் தூக்கம் வராமல் அவதியுறுவார்களாம். காந்தப் புயலால் வெகுவாகப் பாதிக்கப்படுபவர்கள் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குக் கூடப் போகநேரிடுமாம்! தலை போனாலும் இனி வடக்கே தலை வைத்துப் படுப்போமா?




❋ நேருஜிக்கு உடல் நலமில்லாதிருந்த போது நிறையப் புத்தகங்கள் படித்தார். அவர் படித்த புத்தக ஜாபிதாவில் என்னென்னமோ புத்தகங்களின் பெயர்கள் இருக்கின்றனவேயன்றி ஒரு கார்டனர், ஓர் அகாதா கிரிஸ்டி போன்ற ஆசிரியர்களின் துப்பறியும் புத்தகமே காணப்படவில்லை. அமெரிக்க ஜனாதிபதி உட்ரோவில்ஸன் உடல்நலமில்லாத போதோ, அல்லது மன அமைதி இல்லாத போதோ துப்பறியும் நாவல்களைத்தான் படிப்பது வழக்கம். “நான் அமெரிக்காவின் ஜனாதிபதி என்பதை மறந்திருக்கும் நல்ல சந்தர்ப்பங்களும் உண்டு. அப்படி மறந்திருப்பதற்குரிய வழிகளுள் ஒன்று கிடுகிடு என்று ஓடும் ஒரு நல்ல துப்பறியும் கதைப் புத்தகத்தை எடுத்துப் படிப்பேன். அதில் வரும் யாரோ ஒரு கற்பனைக் குற்றவாளியைத் தேடிப் பிடிக்க அவனை உலகம் முழுதும் துரத்திச் சென்று கொண்டிருப்பேன்.....” என்று அவர் எழுதியிருக்கிறார்.

நேருஜியும் துப்பறியும் நாவல்களைப் படித்து வந்தால் மன அமைதி பெறுவதோடு வேறொரு லாபமும் ஏற்படக் கூடும். லஞ்ச ஊழல்களைத் துப்புக் கண்டுபிடிக்க ஏதாவது வழி தோன்றுமல்லவா?

ஃ ஃ ஃ

❋ காங்கிரஸ் மகாநாட்டில் ஸ்ரீ மொரார்ஜி தேசாய், ‘ஜனநாயகமும் சோஷலிஸமும்’ என்ற விஷயம் பற்றி ஆங்கிலத்தில் பேசத் தொடங்கியபோது சிலர் அவர் ஹிந்தியில் பேசவேண்டும் என்று கூறினர். “இந்த விஷயத்தைப்பற்றி எனக்கு, உங்களுக்கு எல்லாருக்குமே குழப்பம் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே அதைப் பற்றித் தெளிவாக எடுத்துச்சொல்ல வேண்டுமானால் ஆங்கிலத்தில்தான் பேசியாக வேண்டும்” என்று கூறிவிட்டு அந்த மொழியில் பேசினாராம்.

ஆனால் ஆங்கிலத்திலேயே பேசியோ, எழுதியோகூட விஷயத்தைப் புரிந்துகொள்ள முடியாதபடி செய்துவிட முடியும். இந்த ஆபத்து நேராதிருப்பதற்காக அமெரிக்காவில் செய்திகளை ஒலி பரப்புவதற்காகப் ‘பிரத்தியேக ஆங்கிலம்’ என்ற முறையைப் பின்பற்றுகிறார்கள். அது வேறொன்றுமில்லை; அகராதியைப் புரட்டிப் பார்த்துத் தெரிந்து கொள்ள வேண்டிய அவசியமில்லாதபடி 1000 சுலபமான ஆங்கில வார்த்தைகளை மட்டும் பொறுக்கி எடுத்து அவற்றை உபயோகிக்கிறார்கள்.

‘வாய்ஸ் ஆப் அமெரிக்கா’ ஒலிபரப்புகளில் இந்தப் ‘பிரத்தியேக ஆங்கில’ முறைப்படியே பேசுகிறார்கள்.

✽ பிரான்ஸிஸ் கூப்பர் என்பவர் எழுதுகிறார்: உலகமெங்கிலும் கள்ளத்தனமாகப் பதுக்கப்பட்டிருக்கும் தங்கத்தின் எடை 15,000 டன் என்றும் இது 5,750 மிலியன் பவுண்டு (1 பவுண்டு சுமார் 13 ரூபாய்) பெறுமானமுள்ளது என்றும் மதிப்பிடப்பட்டுள்ளது. பெல்ஜியம், பிரான்ஸ், ஜெர்மனி, இத்தாலி, கனடா, ஸ்விட்ஜர்லாந்து, ஸ்பெயின் ஆகிய தேசங்களின் அதிகாரபூர்வமான தங்க உடைமைகளை யெல்லாம் சேர்த்துக் கூட்டிப் பார்த்தால் கூட இத்தனை எடையும் பெறுமானமுமுள்ள தங்கமும் தேறாது! ஆனால் இத்தனை பதுக்கல் தங்கமும் பிரயோசனமின்றிக் கிடக்கிறது. ஏனெனில் இவை அனைத்தும் சட்டத்துக்குப் புறம்பாகப் பதுக்கப்பட்டவை. இவற்றை வெளிப்படையாக விற்க முடியாது!



ஃ ஃ ஃ

✽ டாக்டர் ரோகஸாப் என்ற ரஷ்ய ஸர்ஜன் ஒரு நிலைக் கண்ணாடியின் முன் நின்று கொண்டு தமது வயிற்றைக் கீறித் தமக்கே 'அபெண்டிஸைடிஸ்' ஆபரேஷனை வெற்றிகரமாகச் செய்து கொண்டாராம்.

சுய ஆபரேஷன் செய்து கொள்வது பெரிய வித்தையல்ல! அவர் சுயமே தம் தலையை ஒழுங்காகக் கிராப் செய்து கொண்டு விட்டும், பார்க்கலாம்.

ஃ ஃ ஃ

✽ அமெரிக்காவிடமிருந்து ருஷ்யா கோதுமை வாங்கத் தீர்மானித்ததும் அமெரிக்கப் பத்திரிகையொன்றில் ஒரு கேலிச் சித்திரம் வெளியாயிற்று. அதில் குருஷேவிடம் அவரது அந்தரங்கக் காரியதரிசி கேட்கிறார்: ''உலகம் முழுதும் கம்யூனிஸ மயமாக வேண்டும் என்கிற உங்கள் ஆசை நிறைவேறி விட்டால் பிறகு நாம் எங்கேயிருந்து கோதுமையை வாங்க முடியும்?''



ஃ ஃ ஃ

✽ ப்ரோபியூமோ — கிரிஸ்டின் கீலர் விவகாரத்தின் போது பிரிட்டிஷ் காமன்ஸ் சபையில் காரசாரமான விவாதம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. அப்போது பக்திமானாகிய ஸர் ஸைரில் என்பவர் உகுத்த ஒரு பொன்மொழி: ''இந்தநாட்டினைக் கெட்டிக்காரர்கள் ஆள்வதைவிட யோக்கியமானவர்கள் ஆள்வதையே நான் விரும்புகிறேன்; மக்களுக்கும் அதுவே நல்லது.''

ஃ ஃ ஃ

✽ பல்கேரிய கம்யூனிஸ்டுத் தலைவரான டோடார் ஷிவ்கோவை மூளையற்றவர் என்றும், திறமையற்றவர் என்றும் பல்கேரியர்கள் கருதுகிறார்கள். அவரைப் பரிகசித்துத் தமாஷாகப் பேசிக் கொள்வார்களாம் :

''விதம் விதமான ஒட்டுச் செடிகளைச் சிருஷ்டிப்பதில் ரஷ்ய மிஸெங்கோவுக்குச் சமமாக யாரையும் சொல்வதற்கில்லை என்றார்களே, அப்படியா?''

''ஏன் நமது ஷிவ்கோவின் தந்தை இருக்கிறாரே!''

''அவர் என்ன அப்படி அபூர்வமானதாகச் சிருஷ்டித்து விட்டார்?''

''பேசும் ஒரு பூசணிக்காயையே (மகனை) சிருஷ்டி செய்திருக்க வில்லையா?''

இது போன்ற சம்பாஷணைக் கதைகள் பல உண்டு.

இப்படிக் கட்சித் தலைவர்களையும் கம்யூனிஸ்ட் அரசாங்கத்தையும் பரிகசித்துப் பேசுவதைக் குற்றமாக்கிப் பல்கேரிய சர்க்கார் இப்போது ஒரு சட்டம் பிறப்பித்திருக்கின்றனர்.

''அரசியல் சம்பந்தமாகத் தமாஷ் செய்வது, எழுதுவது, படம் போடுவது எல்லாம் ஒரு சில்லறைப் போக்கிரித்தனமான செயல்!'' என்று குற்ற ஜாபிதாவில் சேர்க்கப்பட்டிருக்கிறது. இந்தக் குற்றமிழைப்பவர்களுக்கு இரண்டு வாரம் சிறை வாசம், அல்லது பதினைந்து பவுன் அபராதம்.

இதைப் பார்க்கையில் மாஸே துங்கைப் பேட்டி கண்ட அமெரிக்க நீக்ரோவின் கதை நினைவு வரும்: ''சிறையில் இனவேறுபாடு, ஏற்றத்தாழ்வு எதுவுமே கிடையாது! இங்கே எல்லாரும் சரிசமம்; எல்லாருமே அடிமைகள்'' என்றாராம் சீனத் தலைவர்.

ஃ ஃ ஃ

✽ இங்கே ரத்த தானம் செய்யுங்கள்; ஓர் உயிரைக் காப்பாற்றுங்கள் என்பது போன்ற விளம்பரப் பலகைகளைச் சர்க்கார் ஆஸ்பத்திரிகளுக்கு எதிராகக் காண்கிறோம். ஆனால் இப்போது முதன் முறையாக இறந்து போனவர்களுடைய உடலிலிருந்துகூட இரத்தத்தை எடுத்து இரத்தம் தேவைப்படுகிற நபருக்கு அளிக்கலாம் என்பதை அமெரிக்க டாக்டர்களும் ஆராய்ச்சியாளர்களும் நிரூபித்திருக்கிறார்கள். ஒருவர் இறந்துபோய் ஐந்து முதல் ஐந்தரை மணி நேரமான பிறகும் கூட அவர் ரத்த தானம் செய்யலாமாம்! இந்தப் புரட்சிகரமான — ஆனால் நடைமுறையில் மிக எளிமையான கண்டுபிடிப்பினால் போர்க்களத்தில் பல உயிர்கள் காப்பாற்றப்படுவது உறுதி.

## நமது இந்தியா :

திருக்கோவிலூருக்குப் பக்கத்திலுள்ள மானம்பூண்டி என்ற கிராமத்தில் உத்தராதி மடத் தலைவரான ஸ்ரீ ரகூத்தம தீர்த்த ஸ்வாமிகளின் ஆராதனை நடைபெற்றது. அன்று தினம் பொறுக்கியெடுத்த சில வைதிக சிரேஷ்டர்களுக்கு முதல்தரமான விருந்து அளிக்கப்பட்டது. அவர்கள் இலைகளை விட்டு எழுந்து சென்றதும் இரு வரிசையில் நின்றிருந்த பக்தர்கள் ஒவ்வொருவராக வந்து அந்த இலைகளில் விழுந்து புரண்டு விட்டுப் போனார்கள். அப்படிச் செய்தால் தீராத வியாதிகள் தீர்ந்துவிடும் என்று நம்புகிறார்கள்.

# அவரது இரத்தம் அநேக உயிர்களைக் காப்பாற்றியிருக்கிறது

1935 ஆண்டு. அப்பொழுது ஜம்ஷெட்பூர் டாடா ஆஸ்பத்திரியிலே ஒருவர் இறக்கும் தருவாயிலிருந்தார். இரத்தத்தை உடலில் பாய்ச்சினால்தான் அவரை பிழைக்கச் செய்ய முடியும். அந்தக் காலத்திலே இரத்த தானம் செய்தால் உடல் பலம் பாதிக்கப்படும் என்று அநேகமாய் எல்லோரும் கருதினர். ஆனால் ஒரு இளைஞர் தானாகவே முன்வந்து தனது இரத்தத்தைக் கொடுத்து அந் நோயாளியைப் பிழைக்க வைத்தார். 1935லிருந்து 1955 வரை தொழிற்சாலை விபத்துகளுக்கு இரையானவர்களையும் உயிருக்கே ஆபத்தான நோய் கண்டிருந்தவர்களையும் காப்பாற்றுவதற்காக அவரே ஆண்டொன்றிற்கு சராசரி 2 தடவைகள் வீதம் 40 தடவைகள் இரத்ததானம் செய்திருக்கிறார்.

இந்த அசாதாரண மனிதர்தான் திரு டி.எம். பாலம் என்பவர். ஜம்ஷெட்பூர் டாடா ஸ்தாபனத்தில் டைபிஸ்டாக வேலை செய்யும் ஐம்பது வயது நிரம்பிய இவர், சந்தோஷத்துடன் குடும்ப வாழ்க்கை நடத்துகிறார். இப்பொழுதும் இவருக்கு இரத்த தானம் செய்ய ஆசைதான். ஆனால் டாக்டர்கள் அவரை அப்படிச் செய்ய அனுமதிப்பதில்லை.





தன்னலமற்ற இந்த எடுத்துக்காட்டு மூலம் உணர்ச்சி யூட்டப்பட்ட திரு. பாலம்போன்ற பலரும் எஃகு நகரத்திலுள்ள மற்றும் அநேகரும் இரத்த தானம் செய்திருக்கின்றனர். துயரிலிருந்தும் அழிவிலிருந்தும் ஜனங்களை காப்பாற்றுவதற்காக 20,000த்திற்குக் குறையாமல் டாடா ஸ்தாபனத்தின் ஊழியர்கள் தங்கள் இரத்தத்தைப் பரிட்சை செய்து, அதனை தரம் வாரியாகவும் பிரித்துக் கொண்டிருக்கின்றனர். இன்னும் பலர் இதற்கென்று முன் வந்துகொண்டிருக்கின்றனர்.

ஜம்ஷெட்பூரின் தொழிலாளர்கள் ஒற்றுமையுடன் இருப்பதற்கு இது மற்றுமொரு உதாரணம். இங்கே தொழில், வெறும் ஜீவனோபாயத்திற்கு மட்டுமல்லாமல் வாழ்க்கைக்கே வழியாகும்.

## ஜம்ஷெட்பூர்

எஃகு நகரம்

**தேசீய பாதுகாப்பு நிதிக்கு தாராளமாக வழங்குங்கள் !**

The Tata Iron and Steel Company Limited

JWTTN 1234A

# உங்கள் கூந்தலின் உண்மை அழகை வெளிப்படுத்த

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் உபயோகியுங்கள்



உங்களுக்குப் பிடித்தமான கூந்தல் அலங்கரிப்பு எதுவாயினும், கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலைத் தவருமல் தேய்த்து வருவது கூந்தல் அடர்த்தியாக அழகுடன் வளர்வதற்கு இன்றியமையாதது!

தினந்தோறும் கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலை மயிர்க்காலிலும், கேசத்திலும் தேய்த்துக் கொள்வது லக்ஷக்கணக்கான குடும்பங்களில் இப்பொழுது குளிக்குமுன் செய்யும் அவசியமான பழக்கமாகிவிட்டது. இவ்வெளிய பழக்கத்தினுல் உங்கள் கூந்தல் அடர்த்தியாக நீண்டு பளபளப்புடன் வளருவதுடன், இளமைத் துடிப்பின் காந்தியோடும் அற்புத ஜ்வலிப்போடும் விளங்குவதைக்கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள்.



எல்லோரும் அதிசயிக்கும் வண்ணம் உங்கள் கூந்தலின் உண்மையழகை வெளிப்படுத்த கால்கேட் உதவுகிறது.




மகிழ்ச்சிதரும் நறுமணம்
உங்கள் குடும்பம் முழுவதும் அதை விரும்பும்!

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

# அறிவுக் கனலே



# அருட் புனலே!

ரா. கணபதி

52

**வ**ரநகரத்துக் குருபாயிக்கள் புரிந்த சாதனைகள் அனந்தம். பரமஹம்ஸ ராம கிருஷ்ணருக்கு அவர்கள் புரியும் பூசனைதான் அவர்களுடைய எல்லா சாதனைகளுக்கும் சிகரமாக விளங்கும். ஸ்ரீ ராமகிருஷ்ணரின் திரு உருவப்படம் ஒன்றைப் பூஜை அறையில் அவர்கள் பிரதிஷ்டை செய்திருந்தார்கள். மந்திர பூர்வமாக அந்த உருவுக்கு வழிபாடு நடத்துவார்கள். தூபங்கள் போடுவார்கள். தீபங்கள் ஏற்றித் தீபாராதனை புரிவார்கள். ஜாலராக்களையும், சேமக்கலங்களையும் கொட்டிக் கம்பீர நாதத்தைப் பாய்ச்சுவார்கள். அமுது நிவேதனம் செய்வார்கள். சந்திவேளையில் ஆராத்ரிக வழிபாடு நடத்தி எல்லோருமாக நெஞ்சு நைந்துபோக ஒரே குரலில் பாடுவார்கள். அதே வேளையில் காசிவிசுவநாதனின் திருமுன்பு பாடப்பெறும் நாம சங்கீர்த்தனத்தைப் பக்தி புஞ்சிதமாகப் பாடுவார்கள்.

**ஜய சிவ ஓம்கார! பஜ சிவ ஓம்கார!**
**ப்ரம்ம விஷ்ணு ஸதாசிவா!**
**ஹர ஹர ஹர ஹர மஹாதேவா!**

என்ற புனிதமான சப்தங்கள் நிரம்பி வரநகரத்தின் அந்தப் பாழடைந்த மாளிகை வரப் பிரசாதம் பெற்ற கோயிலாகத் திகழும்.

இவ்வளவு சாதனைகள் புரிந்தும் ஸ்வாமிஜியின் உள்ளம் நிறைவு காணவில்லை. அவர் வாய் விட்டுக் கதறுவார்: ''நான் இங்கு என்ன பெரிய அநுபவங்களைக் கண்டுவிட்டேன்? மந்திரங்களைத் தங்க மயமாகப் பிரகாசிக்கும் அக்ஷரங்களில் கண்டுகொண்டேன்! காளி மாதாவின் திருவுருவைப் பல முறை கண்டு விட்டேன் என்பதும் வாஸ்தவம்! அவளுடைய இதர தெய்வ ரூபங்களைத் தரிசனம் செய்ததும் உண்மையே. என்றாலும், என்றாலும், எனக்குச் சாந்தி எங்கே இருக்கிறது? எனக்கு எதிலும் அதிருப்திதான் ஏற்படுகிறது! எதிலுமேதான் — ஆமாம் இந்தப் பக்தர்களுடன் பேசுவது கூட எனக்கு அருசியாகி விட்டது.... சத்தியத்தை நான் அநுபவிக்காவிடில் பட்டினி கிடந்தே சாவேனாக!''

ரிஷிகளைப் போல் மந்திரங்களைக் கண்ணுக்கு முன் கண்டதும், மகரிஷிகளைப் போல் எல்லாத் தெய்வங்களையும் தரிசனம் செய்ததும் கூட ஸ்வாமிஜிக்குப் போதவில்லை. 'நானே பரம்பொருள்' என்று உணரும் அநுபவம்தான் அவருக்குத் தேவைப்பட்டது. ஆனால் நிரந்தரமான அத்வைதாநுபவத்தை நரேந்திரர் மக்கள் பொருட்டுத் துறக்க வேண்டுமென்றே பரமஹம்ஸர் பணித்திருந்தார். அந்தத் துறவினை நரேந்திரரால் அவ்வளவு எளிதில் மேற்கொள்ள முடியவில்லை.

ஆனால் பிறருக்கெனத் தமது ஆத்ம சாதனைகளைத் துறக்கும் மகத்தான சாதனையைப் புரிந்த ஒருவரும் அந்த சந்நியாசிகள் சங்கத்தில் இருக்கத்தான் செய்தார். அவர்தான் ஸ்வாமி ராம கிருஷ்ணானந்தர் என்ற திருநாமத்தைத் தாங்கியிருந்த சசி.

எல்லா சாதுக்களும் தியானம், பூஜை என்றே இருந்து விட்டால் அவர்களு டைய இதர காரியங்கள் என்னாவது? அவற்றையெல்லாம் கவனிப்பதற்காகத் தமது தியானத்தையும் யோகத்தை யும் தியாகம் செய்தார் ராமகிருஷ் ணானந்தர். இவரை வர நகர மடத் தின் 'அன்னை' என்றே சொல்லிவிட லாம். மற்றவர்களைக் குளிக்குமாறும், உண்ணுமாறும் உசுப்பி வந்தவர் இவரே. அவர்கள் குளிக்க நீர் முகந்து வைத்தவ ரும், உண்ண உணவு படைத்து வைத் தவரும் அவரே. ''அவசியமேற்பட்டால் எங்களைப் பலவந்தமாகத் தியானத்தி லிருந்து எழுப்பித் தரதர வென்று உண்ண இழுத்துக் கொண்டு போவார் அவர்'' என்று ஸ்வாமி விவேகானந்தரே கூறியிருக்கிறார்.

'ஸத் ஸங்கத்வே நிஸ் ஸங்கத்வம்' என்று ஆதிசங்கரர் கூறியபடி சாதுக்கள் சங்கத்தின் விசேஷம் எல்லாச் சங்கத் தையும் துறக்கும்படி செய்வதேயாகும். எனவேதான் போலும், வர நகரத்துத் துறவிகளுக்குப் பரிவிராஜக ஆண்டி வாழ்வில் நாட்டம் சென்றது. துறவு என்பதன் மகிமையைத்தான் பாருங்க ளேன்! ஏதேனும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் சிறிது காலம் தங்கினாலும் கூட அங்கிருக்கப் பொறுக்க மாட்டா மல் அந்த இடத்தையும் துறந்துவிட வேண்டும் என்று துறவுள்ளத்தில் நமைச்சல் எடுக்கிறது! இளம் சாதுக் களில் பலரும் இவ்வாறே க்ஷேத்திரா டனம் கிளம்பினர்.

ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அஸ்தியைப் பூஜித்துக்கொண்டு அவர் உபயோகித்த படுக்கை, துணிகள், பாத்திரம், பண் டங்கள் ஆகியவற்றைப் பாதுகாத்துக் கொண்டு ராமகிருஷ்ணானந்தர் மட்டும் வரநகரத்திலேயே இருக்கத்தான் எண்ணினார்.

குருபாயிக்களுக்காகத்தான் இத்துணை காலமும் ஸ்வாமிஜி தமது தேச சஞ் சார விருப்பத்தை அடக்கி வந்தார். எனவே இப்போது, அதாவது 1888ம் ஆண்டு, நிர்விசாரமாக, கூண்டை விட் டுக் கிளம்பிய பட்சியாகப் புறப்பட்டார் நரேன். அவரது இந்த ஆண்டி வாழ் வைப் பரிவிராஜக காலம் என்றே பக்தர்கள் கூறுவார்கள். பரிவிராஜக ராக அவர் நாடு முழுவதிலும் திரிந்தது ஐந்தாண்டுகளாகும்.

ஸ்வாமிஜியின் வாழ்க்கை வரலாற் றின் இந்தப் பகுதியில் ஆங்காங்கு வெற் றிடங்கள் தட்டுகின்றன.

இந்தக் காலத்தில் நடைபெற்ற எல்லாச் சம்பவங்களையும் அவரொருவர் தான் அறிந்திருக்க முடியும். ஆனால் அவரோ விவேகானந்த ஸ்வாமியான பின்பு தமது பூர்வாசிரமத்தைப் பற்றி மிக மிகக் குறைவாகவே பேசி வந்தார். இருப்பினும், ஸ்வாமிஜி இக்காலத்தில் எழுதிய கடிதங்கள் சில விவரங்களைக் கூறுகின்றன. (ஸ்வாமிஜி மனசு திறந்து கடிதம் எழுதியுள்ள அழகு அவற்றைப் படிப்பவர்களுக்குத் தான் தெரியும்.)

குருபாயிக்கள் ஓரிருவர் அவருடன் அவ்வப்போது சென்றதுண்டு. இவர்க ளின் மூலமும் சில விவரங்கள் தெரிந்து கொள்ளுகிறோம். மேலும் அவர் சென்ற விடங்களில் புதிதாக அவரது சீடரான வர்கள் பலர் விரிவான குறிப்புக்களை விட்டுச் சென்றுள்ளனர். இவற்றிலும் ஸ்வாமிஜியின் உலகம் காணு வாழ்க்கை ஒருவாறு விரிகிறது.

காசி என்றும் வாரணாசி என்றும் கூறப்படும் திவ்விய க்ஷேத்திரம்தான் ஸ்வாமிஜியை முதன் முதலில் அழைத் தது. துறவியான அவரது பாட்டனார் துர்கா சரணரையும் அந்த ஸ்தலம் அழைத்திருந்ததல்லவா? காசி விசுவேசு வரனுக்கு வேண்டிக் கொண்டுதானே புவநேசுவரி ஸ்வாமிஜியைப் பெற் றெடுத்ததே!

ஒரு நாள் காசியில் துர்காமந்திரத்துக் குச் சென்று திரும்பிக் கொண்டிருந்தார் ஸ்வாமிஜி. எங்கிருந்தோ ஒரு பட்டாள மாகக் குரங்குகள் திரண்டு வந்து அவ ரைத் துரத்த ஆரம்பித்தன. அஞ்சா நெஞ்சரான ஸ்வாமிஜிக்குமே கலக்க முண்டாயிற்று. அவர் வேகமாக ஓட லானார். வானரங்களும் தங்கள் வேகத்தை அதிகரித்துக் கொண்டன. திடீரென்று ஒரு சந்நியாசியின் குரல் ஸ்வாமிஜியின் காதுகளில் ஒலித்தது.

''நில்லு. அந்தக் குரங்குகளுக்கு முகம் கொடுத்து வெல்லு'' என்றது அக்குரல். அதே போலவே ஸ்வாமிஜி குரங்குகளின் பக்கம் கம்பீரமாகத் திரும்பி நின்றார். மறு விநாடியே அவை திரும்பி மறு பக்கம் ஓட்டம் பிடிக்கலா யின. பல ஆண்டுகளுக்குப் பின் விவேகா நந்த ஸ்வாமி நியூயார்க்கில் பிரசங்கம்

# B·I



## S. S. ரஜுலா

| சென்னையிலிருந்து | நாகப்பட்டினத்திலிருந்து |
|---|---|
| 1964 பிப்ரவரி 15 | 1964 பிப்ரவரி 16 |

கம்பெனியின் சென்னைக் காரியாலயத்தின் மூலம் விற்பனை செய்யக்கூடிய பர்த் வசதியற்ற மற்றும் பங்க் வசதியுள்ள மேற்கண்ட கப்பல் பிரயாணத்துக்குரிய டிக்கட்டுகள் எல்லாம் விற்பனை ஆகிவிட்டன. இருந்தாலும் இவ்வகுப்பு டிக்கட்டுகள் கீழ்க்கண்ட கம்பெனியின் அங்கீகாரம் பெற்ற பாஸேஜ் புரோக்கர்களிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

| C. M. குட்டி | AL. காசி செட்டியார் | கேரளா டிராவல்ஸ் |
|---|---|---|
| 38, அங்கப்ப நாயக்கன் தெரு | கத்தோலிக் சென்டர் பில்டிங்ஸ் 6, அரமனைக்காரத் தெரு | மாஸ்காட் ஹோட்டல் |
| சென்னை-1 | சென்னை-1 | திருவனந்தபுரம் |

பினாங்கு, போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி ஆஸ்திரேலியா, நியூஜிலாந்து துறைமுகங்களுக்கு அனுப்பவும் சரக்குகள் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றும் விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்:

| பின்னி & கோ. லிட். | மதுரா கம்பெனி பிரைவேட் லிட். |
|---|---|
| 7. அரமனைக்காரத் தெரு. சென்னை-1 | முதல் லேன் பீச் ரோடு, நாகப்பட்டினம் |

ஏஜெண்டுகள்: பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட்

---

பண்டிட்
டி.கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்

ஆயுர்வேதாஸ்ரமம்
பிரைவேட் லிட்.
மதராஸ்-17

புரியும் போது இந்த நிகழ்ச்சியை எடுத்துக் கூறி, அதன் படிப்பினையையும் மொழிந்தார்: ''இயற்கை வேகங்களை எதிர்த்து முகம் கொடுத்து வெல்லுங்கள்; அறியாமைக்கு முகம் கொடுத்து நில்லுங்கள்; மாயையை எதிர்நோக்கிப் போராடுங்கள். ஒரு போதும் அவற்றுக்காகப் பயந்து ஓடாதீர்கள்'' என்று ஆணையிட்டார்.

பல ஆண்டுகளுக்கு முன்பு ஸ்ரீ ராமகிருஷ்ணர் தரிசித்த திரைலிங்க ஸ்வாமியையும் காசியிலே தரிசித்தார் நமது ஸ்வாமிஜி.

வராக நகரத்துக்கு ஸ்வாமிஜி திரும்பியபோது பாரதத்தின் ஒரு பகுதியில் உள்ள மக்களை யெல்லாம் கண்டிருந்ததால் மக்கள் பணிக்குப் புது உத்வேகம் பெற்றிருந்தார்.

மற்ற பாலியத் துறவிகளிடமும் மக்கள் பணி பற்றிக் கூறி அவர்களை அதனில் ஈடுபடுத்த முயன்றார் ஸ்வாமிஜி. குருபாயி ஒருவர் 'வெறுமனே பேசுவதால் என்ன புரட்டிவிட முடியும்?' என்று அவரிடம் கேட்டுவிட்டார். அப்போது உணர்ச்சிவசப்பட்டு ஸ்வாமிஜி சொல்லுவார்: ''எல்லாரும்தான் பிரசாரம் செய்கிறார்கள் என்பது வாஸ்தவமே. ஆனால் அவர்கள் உணராமலே செய்யும் பிரசாரத்தை நான் உணர்ந்து செய்வேன். ஆம், என்னுடைய குருபாயிக்களாகிய உங்களால்கூட என் வழியில் நிற்க முடியாது. நீங்கள் தடுத்தாலும் கேளாமல் நான் சேரிகளுக்குள் ஈனமான சேரிக்குச் சென்று பஞ்சமர்களுக்கும் உபதேசம் செய்வேன்......''

சடேரென அவரது சிந்தனை ஒரு சுற்றுச் சுற்றியது. மெல்லிய குரலில் அவர் முனகினார்: ''உபதேசம்.... உபதேசம் செய்வது என்றால் என்ன? தன் எண்ணங்களை வெளிப்படுத்துவதே உபதேசம். த்ரைலிங்க ஸ்வாமி மௌனியாக இருக்கிறார். அவர் ஒரு போதும் பேசுவதில்லை என்பதால் அவர் உபதேசம் செய்ய வில்லை என்று நினைக்கிறீர்களா? அவருடைய மோனமே பிரசங்கமாகும். மரங்களும் செடிகளும் கூட இப்படி மோன உபதேசம் செய்த படிதான் இருக்கின்றன.''

ஆதி குருவாம் வடவாலத்து வடிவழகன் இப்படித்தானே உபதேசிக்கிறான்?

மீண்டும் ஸ்வாமிஜி வாரணாசிக்குச் சென்றார். அங்கு பாபு பிரமததாஸ் மித்ரா என்பவரைச் சந்தித்து நெருக்கமான நட்புப் பூண்டார். சம்ஸ்கிருதத்தில் உயர்ந்த பாண்டித்தியம் பெற்றிருந்த பிரமத தாஸரிடமிருந்து சுருதி, ஸ்மிருதிகளில் தமக்கிருந்த ஐயங்களுக்கு விடை கண்டார் ஸ்வாமிஜி.




''எதற்காக உன் கணவரின் ஆடைகளை வீட்டுக்கு வெளியில் உலரப் போட்டிருக்கிறாய்?''

''அவை எவர்சில்வர் பாத்திரக்காரனைக் கவர்ந்திழுக்கு மென்பதால்!''

காசியிலிருந்து அயோத்தியை அடைந்தார் ஸ்வாமிஜி. 'நிலமகள் முகமோ, திலகமோ, கண்ணோ' என்று கவி பாடிய அந் நகரில், நிலத்திலேயே கிடந்து எடுக்கப்பட்ட நிலமகளும் அவளது நாயகனும் துன்பங்களைத் தேடி அநுபவித்து வாழ்ந்த பெருமையை எண்ணி உருகினார். அயோத்தியர் வேந்தனைச் சாதுக்கள் தோத்திரிக்கும்போது மெய் புளகிக்க, விழி நீர் சோரப் பரவசராகி அதனில் தாமும் கரைந்து மகிழ்ந்தார் ஸ்வாமிஜி. அடிநாளிலிருந்து அவர் ராமபிரான்பால் கொண்டிருந்த பிரேமை கொஞ்சமா?

ராமன் ஆண்ட அயோத்தியிலிருந்து லக்ஷ்மணபுரியாகிய லக்னௌ சென்று சேர்ந்தார் ஸ்வாமிஜி. அங்கு நவாபு மாளிகைகளையும், மசூதிகளையும், பூங்காக்களையும் சுற்றிப் பார்த்துத் தம் அழகுணர்ச்சிக்கு விருந்து படைத்துக் கொண்டார். பின்னர் ஆக்ராவை அடைந்தார். ஸ்வாமிஜியின் கலை உள்ளத்துக்குக் கொள்ளையின்பம் கூட்டியது தாஜ்மகால். அன்பிலே பிறந்த அழகு அல்லவா அது? ஷாஜஹான் மனைவியிடம் கொண்

டிருந்த அன்பையும், அந்த அன்பை ஆதாரமாகக்கொண்டெழுந்த தாஜ்மகாலின் அழகையும் ரசிகரான ஸ்வாமிஜி கண்டு குதூகலித்தார். 'தாஜ்மகாலை முழுமையாக அறிந்து ரசிப்பதற்குக் குறைந்தபட்சம் ஆறு மாதங்களேனும் வேண்டும்' என்பார் ஸ்வாமிஜி. ஆக்ராவிலுள்ள கோட்டை கொத்தளங்களைப் பார்வையிடும்போதும், அதன் வீதிகளில் நடமாடும் போதும் மொகலாயர்களின் நிஞ்சுவை ரசனையைப் போற்றுவார் ஸ்வாமிஜி. அதோடு, 'இஸ்லாமியர் யாவரும் சமம்' என்ற கோட்பாட்டை நடைமுறை ஹிந்து சமயத்தில் காண முடியவில்லையே என்று அவர் துக்கிப்பார். பொதுவாக முகம்மதியர் தங்களின் உடல் நலத்தை எவ்வளவு நன்றாக வைத்துக் கொள்கிறார்கள் என்பதையும் எண்ணுவார். வேதாந்தியின் ஞான பலமும், முஸ்லிம்களின் தேகபலமும் ஒன்று சேர்ந்த மக்களைக் கொண்ட நவபாரதம் உருவாக வேண்டும் என்று ஆர்வம் மிகப் பெறுவார்.

1888 - ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் பிருந்தாவன புண்ணிய பூமியை அடைந்தார் ஸ்வாமிஜி. 'அன்புக்கு இலக்கணமான ஆய்ச்சியர்களின் பாதம் பட்ட இந்த ஆயர்பாடியில் நான் புதராகவோ, கொடியாகவோ, செடியாகவோ பிறக்க மாட்டேனா?' என்று ஞானியான உத்தவர் வேட்கை கொண்ட உத்தம ஸ்தலம் அல்லவா அது? எளிமையால் மட்டுமே ஏற்றம் பெறலாம் என்பதை உபதேசிக்கும் அற்புதத் தலம் அது. பாலாழியில் துயிலும் பெருமான் பாலும் வெண்ணெயும் களவாடி உண்ட எளிமையை எண்ணிய ஸ்வாமிஜி எளியோரிலும் எளியோரானார். தண்டமும், கமண்டலுவும் ஓரிரு புத்தகங்களும் மட்டுமே தமது உடைமைகளாகக் கொண்டு பரிவிராஜகராகப் பிருந்தாவனத்துக்கு வந்தார். வேதங்களும், தேவர்களும் நெருங்க வொண்ணாத பிரபு பிறந்த இடத்தைச் சுலபமாக வந்தடைந்து விடத் தமக்குத் தகுதியில்லை எனக் கருதி, முப்பது மைல்கள் தொலைவிலிருந்து கால் நடையாகவே வந்து, கண்ணனின் கழலிணைகள் இளைத்துக் களைத்த — கண்ணனின் கழலிணைகளில் திளைத்துக் களித்த — பிருந்தாவனத்தை அடைந்தார் ஸ்வாமிஜி.

தமது இதயக் கதவுகள் படீரெனத் திறந்து கொள்வது போல் இருந்தது ஸ்வாமிஜிக்கு. அந்தக் கதவுகளுக்கப்பாலுள்ள ஆனந்த சாம்ராஜ்யத்தில் ராதிகாவும் முரளீதரனும் அன்பு செய்து கொண்டிருந்தனர். ஆண்டவனால் மட்டுமே செலுத்தக்கூடிய கருணையை அந்த இடைப் பிள்ளை பொழிய, ஆளப்படுவதற்குப் பூர்ணமான ஒப்புக் கொடுத்துக் கொள்பவர்களால் மட்டுமே செலுத்தக் கூடிய பிரேமையை அந்த ஆயர் குலப் பெண் அவன் மீது சொரிந்து கொண்டிருந்தாள். ராதா—கிருஷ்ணக் கதையைப் பரிகசித்து வந்த ஸ்வாமிஜி அந்தக் காட்சியில் தம்மை மறந்தார். ஜீவாத்மாவும் பரமாத்மாவும் இணையும் மகத்தான தத்துவமே ராதா — கிருஷ்ணப் பிரேமை என உணர்ந்தார்.

கோவர்த்தன கிரியைக் கண்டு, கோக்களையும் கோபர்களையும் காப்பதற்காகக் குட்டி கிருஷ்ணன் தன் குஞ்சு விரலால் அந்த மலையைத் தூக்கி நிறுத்திய அருங்குணத்தை நினைந்து நீர் பெருக்கினார். 'குன்று குடையாய் எடுத்தாய், குணம் போற்றி' என்றேயல்லவா நாச்சியாரும் அருளிச் செய்தாள்? கோவர்த்தன கிரியைக் கால்சோரப் பிரதட்சிணம் செய்யப் புறப்பட்ட ஸ்வாமிஜி அன்று உணவு தம்மைத் தேடி வந்தாலொழியத் தாமே உணவைத் தேடிச் செல்லலாகாது என்று சங்கற்பித்துக் கொண்டார்.

நண்பகல் வந்து விட்டது. உள்ளத்துக்குத்தானே சங்கற்பம்? உடலுக்கு அது எப்படித் தெரியும்? பசி வயிற்றைக் கிள்ளத் தொடங்கியது. இந்த நிலைமையில் மழை வேறு பெய்யத் தொடங்கி விட்டது. மலையால் மழை தடுத்த கிரிதரனை நினைந்தபடி ஸ்வாமிஜி சென்று கொண்டேயிருந்தார். தலைச்

## நீதியின் காவலர்

சென்னை உயர்நீதி மன்றத்தின் முதல் இந்திய நீதிபதியாக விளங்கிய முத்துஸ்வாமி அய்யருக்குப் பிறகு அப்பதவியை வகித்தவர் ஸ்ரீ சுப்பிரமணிய அய்யர். 1895ல் பதவி ஏற்றவர் 1907ல் தமது உடல் நலக் குறைவினால் ராஜிநாமா செய்து விட்டார். நீதிபதியின் அலுவல்களைக் கவனிக்க முடியாத அளவுக்கு அப்படியொன்றும் பெரிய நோயினால் அவர் பீடிக்கப்பட்டு விடவில்லை. இருந்தாலும் ஒரு பொறுப்புள்ள பெரிய உத்தியோகத்தில் அதனை வகிப்பதற்குரிய முழுமையான ஆரோக்கியத்துடன் இருந்தாலொழிய, நீடிக்கக் கூடாது என்று முடிவு செய்து தாமாகவே ராஜினாமாவைக் கொடுத்து விட்டார். இன்னும் சில மாதங்கள் தொடர்ந்து பதவியில் இருந்திருந்தால் அவருக்கு முழுமையான பென்ஷன் தொகை கிடைத்திருக்கும். இந்த இழப்பைக் கூட அவர் பொருட்

சுற்றிக் கொண்டு வந்தது. காதில் 'ஓ' வென்று ஓசை கேட்க ஆரம்பித்தது. அந்த ஓசைக்கிடையே, 'ஸ்வாமிஜி ஸ்வாமிஜி, உங்களுக்கு நான் உணவு கொண்டு வந்திருக்கிறேன்' என்று பின்னாலிருந்து குரல் வந்தது. ''இது ஏதோ சோதனைதான்! இவ்வளவு அக்கறையாக எனக்கு யார் மழையில் நனைந்து கொண்டு உணவெடுத்து வருவார்கள்? என் புத்திக்கு ஏதோ பழுது ஏற்பட்டு விட்டது!'' என்று எண்ணிய ஸ்வாமிஜி தமது புத்தியின் போக்கிலிருந்தே தப்பித்து ஓட விரும்புபவர் போல ஓடத் தொடங்கினார். அயர்ந்து போன ஸ்வாமிஜியை அயராமல் பின்தொடரும் அந்தப் பாதங்கள் வென்று விட்டன. ஸ்வாமிஜியின் முன்னால் வந்து விட்டான் முன்பின் அவருக்குப் பழக்கமில்லாத ஒருவன். அவருக்கு உணவு படைத்து, உண்ணச் செய்தான். அவர் உண்டது தான் தாமதம், ஒரு வார்த்தைகூடப் பேசாமல் அவன் போயே போய்விட்டான். 'முன்பின் பழக்கமில்லாதவன்'— என்று சொன்னேனல்லவா? அதற்கேற்ப இந்தச் சம்பவத்துக்குப் பின்னும் ஸ்வாமிஜி அவனைப் பற்றி ஏதும் அறிய வில்லை.

வாஸ்தவமாகவே அறியத்தான் இல்லையா ?

நம்மைப் பரிபூரணமாகப் பகவானுக்கு அர்ப்பணித்துக் கொண்டால் அவன் நம் வாழ்க்கையின் சின்னஞ்சிறிய அம்சங்களைக் கூட நிச்சயமாகக் கவனித்துக் காப்பான். 'யோகக்ஷேமம் வஹாம்யஹம்' என்று சத்தியப் பிரதிக்ஞை செய்து தந்தவனாயிற்றே! ஆனால் அப்படி 'அவன் விட்ட வழியாகட்டும்' என்பதாக மனதில் எத்தகைய ஆசையுமின்றிப் பூரணமாக சரணாகதி செய்ய யாருக்கு முடிகிறது?

ராதா குண்டம் என்ற பகுதி ராதிகா தேவி வாழ்ந்து பக்தி பரப்பிய புண்ணிய ஸ்தலம். ஸ்வாமிஜி இங்கிருக்கும் போது அவரிடம் ஒற்றை வஸ்திரமே இருந்தது. அதனை ஒரு நாள் அவர் கசக்கி உலர்த்தி வைத்திருக்கும் போது ஒரு குரங்கு தூக்கிக் கொண்டு ஓடி விட்டது. மரத்தின் உச்சாணிக் கிளை யொன்றில் ஏறி அமர்ந்து கொண்டு விட்டது. அந்தக் குரங்கிடம் எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தார் ஸ்வாமிஜி. அது அவருக்கு அழகு காட்டிக் கொண்டு பேசாமலேயிருந்தது. ஸ்வாமிஜிக்குக் கோபம் கோபமாக வந்தது. அந்தக் கோபம் வானரத்தின் மீது திரும்ப வில்லை. ராதையின் மீது திரும்பிற்று. கோபிகைகளின் வஸ்திரத்தைக் கண்ணன் எடுத்து வைத்துக் கொண்டு அவர்களின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டது போல, இந்த ஊர் விசேஷம் நப்பின்னை நம்மைச் சோதிக்கிறாள் என்று அவர் எண்ணினாரோ என்னவோ ? ''தயாமூர்த்தி, தயாமூர்த்தி என்று எல்லோரும் போற்றும் ராதே ! உன் இருப்பிடம் தேடி வந்த இந்த இளைஞனை இப்படியா இழிவு செய்வாய்? அதோ கண்ணுக்குத் தெரி

---



படுத்த வில்லை. அவருடைய நியாய உணர்ச்சி அத்துணை சிறப்பாக இருந்தது. இந்த நேர்மையாளரது சிலையைத்தான் அன்றைய ஆங்கிலேயப் பிரதம நீதிபதி யொருவர் ஹைகோர்ட் வட்டாரத்தில் வைக்கக் கூடாதெனத் தடை விதித்தார். ஏனெனில், சுப்பிரமணிய அய்யர் தேசிய உணர்வு கொண்டு டாக்டர் பெஸண்ட் அம்மையாரின் ஹோம் ரூல் இயக்கத்தில் சேர்ந்திருந்தார். அன்னிபெஸண்ட் சிறைப்பட்டதும் இவர் அமெரிக்க ஜனாதிபதி வில்ஸனுக்கு எழுதிய ஒரு கடிதம் மிகப் பிரபலமடைந்து பிரிட்டிஷாரின் ஆக்கிரத்தைக் கிளப்பியது. எனினும் இதே கடிதம்தான், இந்தியாவுக்குச் சுய ஆட்சி தருவதாகப் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் வாக்குறுதி அளிப்பதற்குப் பெரிதும் காரணமா யிருந்தது. இன்றையப் பிரதம நீதிபதி எஸ். ராமச்சந்திர அய்யர் சுப்பிரமணிய அய்யரின் திருவுருவப் படத்தை ஹைகோர்ட் கட்டடத்தில் திறந்து வைத்ததன் மூலம் முந்தானையப் பிரதம நீதிபதி ஒருவரின் தீர்ப்பை மாற்றி நியாயம் வழங்கியதுடன் பாரத நாட்டின் கௌரவத்தையே நிலைநாட்டி யிருக்கிறார்.

தேசிய உணர்வு கொண்ட ஸ்ரீ சுப்பிரமணிய அய்யர் ஆங்கிலேய அரசாங்கம் தமக்குக் கொடுத்த பட்டங்களை வேண்டாமென்று உதறியவர். சென்னை சர்வகலாசாலையின் முதல் இந்தியத் துணைவேந்தராகவும் பணியாற்றிப் புகழ்பெற்றவர். சுப்பிரமணிய அய்யர் நீதிபதியாக இருந்து அளித்த தீர்ப்புக்கள் பல மிக முக்கியமானவை. வல்லூர் ஜமீன் வழக்கில் அவர் அளித்த தீர்ப்பு ஜமீன்தாரி ஒழிப்புச் சட்டம் இயற்றுவதற்கே அஸ்திவாரமாக விளங்கியது.

கிறதே, அந்த வனத்துக்குச் சென்று பட்டினி கிடந்து உன்னுடைய க்ஷேத்திரத்திலேயே என் உயிரை விட்டு விடுகிறேன்'' என்று சூளுரைத்தபடி காட்டை நோக்கி ஓடலானார் ஸ்வாமிஜி.

இவை எல்லாவற்றையும் எங்கிருந்தோ கவனித்துக் கொண்டிருந்த ஒருவன் ஒரு காஷாய வஸ்திரமும், சிறிது உணவும் எடுத்துக் கொண்டு வனத்துக்குச் சென்றான். ஸ்வாமிஜியின் விசால நேத்திரங்களில் பனித் திரையிட்டது. வேட்டியை அணிந்து உணவையும் உட்கொண்டார். வனத்திலிருந்து வெளிப்பட்டார். அவர் எங்கே வஸ்திரத்தை உலர்த்தி யிருந்தாரோ, அங்கேயே அது காய்ந்து கொண்டிருந்தது !

துன்பத்தை உண்டாக்கும் தெய்வமே அதனை நீக்கவும் செய்கிறது. நீக்குவதற்காகவே துன்பத்தை உண்டாக்குகிறது அது! இப்போது மனிதனுக்குக் கிடைக்கும் மகத்தான லாபம் அந்த இடைக் காலத்துத் துன்பத்தில் அவன் ஆண்டவனை நினைவு கொண்டதே யாகும் ! 'தீமை காட்டி விலக்கிடும் தெய்வம்' என்று கவி எவ்வளவு அழகாகக் கூறி விட்டான்!

மானாபிமானம் விட முடியாமல் ராதா குண்டத்தில் தவித்த ஸ்வாமிஜி மானாபிமானம் விட்டுப் பரபக்தி செய்த ராதையை நன்கு புரிந்து கொண்டு விட்டார். தாம் முன்பு கேலி செய்து வந்த மதுர பாவத்தின் உயரிய தாத்பரியத்தை உணர்ந்தார்.

ஒரு சமயம் உத்தரப் பிரதேசத்தில் ஸ்வாமிஜி சென்ற ரயிலில், அதே மூன்றும் வகுப்புப் பெட்டியில் பனியா என்று கூறப்படும் வட இந்திய வர்த்தக குலத்தைச் சேர்ந்த ஒருவர் உடன் வந்தார். ஸ்வாமிஜிக்கு நாவுலர்ந்து தாகமெடுத்தது. வழியிலிருந்த ரயில் நிலையங்களில் ஏதேனும் காசு கொடுத்தால் தான் நீர் கொடுப்பார்கள். இவரிடமோ கால் காசு கிடையாது. இந்தச் சமயத்தில் ஸ்வாமிஜி பணம் வைத்துக் கொள்வது கிடையாது. அன்பர்கள் ரயில் டிக்கெட் வாங்கிக் கொடுத்துவிடுவார்கள். பணமாக எது கொடுத்தாலும் ஸ்வாமிஜி ஏற்றுக் கொள்ள மாட்டார். எனவே இப்போது தவித்த வாய்க்குத் தண்ணீர் கிடைக்காமல் அவதியுற்றார் ஸ்வாமிஜி. அப்போது சக பிரயாணியான அந்த வணிகப் 'புண்ணியாத்மா' கெக்கலி கொட்டிச் சிரித்தார். ''எங்களைப் போல் உடம்பால் உழைத்து வேலை செய்து பொருள் ஈட்டுவதற்கு உமக்கென்ன கேடு ? சமூகத்துக்குப் பாரமாக சந்நியாசம் வாங்கிக் கொண்டதன் பலனைப் பாரும்'' என்று கூறி அவர் ஸ்வாமிஜியைக் குத்திக் காட்டினார். ஸ்வாமிஜி ஆத்திரமடையாமல் மௌனமாகவே இருந்தார்.

தாரிகாட் என்ற ஊரில் இருவரும் இறங்கினர். வெயில் பொசுக்கிக்கொண்டிருந்தது. பசியிலும் தாகத்திலும் வாடிய ஸ்வாமிஜி பிரயாணிகளுக்காக ஏற்பட்ட கூரை வேய்ந்த இடம் ஒன்றை நாடிச் சென்றார். அங்கிருந்த ஊழியர்களின் மனம் வெளி வெயிலை விட வறட்சியாகக் காய்ந்து கிடந்தது. 'காசு தந்தாலொழிய இங்கே உட்காரக் கூடாது' என்று ஸ்வாமிஜியை ஈரமின்றி விரட்டினார்கள். மாடமாளிகையில் பிறந்து வளர்ந்த ஸ்வாமிஜி அப்போதும் மனக் கிளர்ச்சி அடையாமல் காயும் வெயிலில் சென்றமர்ந்தார்.

உடன் வந்த வணிகப் 'பெருந்தகை' பிரயாணிகள் தங்குமிடத்தில் அமர்ந்து கொண்டார். லட்டும், பூரியுமாக விழுங்கினார். அந்த இன்பண்டங்களிலும் வாய் நிறையாமல் மீண்டும் ஸ்வாமிஜியைத் தாக்கி, அந்த வன்சொல்லால் வாய் நிறைந்தார். 'சந்நியாசத்தின் பலன் பார்த்தீரா' என்று கொக்கரித்தார். 'பணம் எதற்கு? காசு எதற்கு?' என்று உபதேசிக்கிறீரே! இப்போது வற்றிய தொண்டையும், காய்ந்த வயிறுமாக, கட்டாந் தரையில் வறுபடுகிறீரே — அதற்காகத்தான் சாமியாரே, காசும் பணமும் வேண்டுமென்பது' என்று ஸ்வாமிஜிக்குப் போதிக்க வேறு தொடங்கி விட்டார். இத்தனைக்கும் ஸ்வாமிஜியின் நரம்பு மண்டலத்தில் ஒரு சிறு நரம்பு கூட இம்மியளவு அசையவில்லை. எங்கிருந்துதான் அவருக்கு அவ்வளவு சாந்தம் வந்ததோ?

**உண்ணாது நோற்பார் பெரியர்**
**பிறர் சொல்லும்**
**இன்னாச் சொல் நோற்பாரின்பின்**

என்றார் தெய்வப் புலவர். உண்ணாது நோற்று, அதே போதில் வன்சொல்லும் பொறுத்த ஸ்வாமிஜி இரு விதத்திலும் பெரியாராகி விட்டார் அல்லவா ?

ஸ்வாமிஜி பொறுத்துக் கொண்டது அவருக்குப் பெருமை. ஆனால் அவரை அப்படியே வன்சொல்லுக்கு இலக்காக்குவது ஆண்டவனுக்குப் பெருமை யாகுமா ?

**எனவேதான், அப்போது அதிசயம் நடந்தது!**

**(தொடரும்)**




உடன் பிறந்தவனின் நல்வாழ்வுக்காகத் தன்னைத் தியாகம் செய்துகொள்ளும் அண்ணனின் கதை.

''ஒரு கதாபாத்திரம் தன் உணர்ச்சிகளை வார்த்தைகளால் வெளியிடுவதை விடுத்துத் தன் செயல்களுக்கான காரணங்களை விளக்கிக் கூறுவானேயானுல், அப்போதே நாடகபாணி அழிந்து விடும்'' என்று ஒரு மேல்நாட்டு அறிஞன் கூறுகிருன். இவ்விலக்கணப்படி பார்க்கும்போது சிவாஜி நாடக மன்றத்தாரின் இந்நாடகம்! என்றைக்கோ அழிந்துபோயிருக்க வேண்டும். ஏனெனில், இதில் வரும் கதாநாயகன் தன் செயல்களுக்கான காரணங்களைப் பலமுறையும் விளக்கிச் சொல்கிருன். தன் குடும்பத்தை மட்டுமின்றித் தேசிய ஒருமைப்பாட்டையே மனத்தில் இருத்திக் கொண்டு தான் காரியங்கள் செய்வதாகக் காட்டிக் கொள்கிருன். நாடகத்தைப் பார்த்துக் கொண்டு வருகையிலேயே அதனூடே இழையோடும் கருத்து இயல்பாக ரசிகர்களின் உள்ளங்களில் பதிய வேண்டுமேயல்லாது வெளிப்படையாக நாடகத்தின் கருத்து இதுதான் என்று சொற்பொழிவாற்றுவது எனக்குப் பிடிக்கவில்லை.

நாடகத்தின் தரம் உயர்ந்தால்தான் ரசிகத் தன்மையின் தரமும் உயரும்; ரசிகத் தன்மையின் தரம் உயர்ந்தால்தான் நாடகத்தின் தரம் உயரும். ('கல்யாணம் ஆனால்தான் பைத்தியம் தெளியும்; பைத்தியம் தெளிந்தால்தான் கல்யாணம் ஆகும்' என்பதுபோல் இருக்கிறதா!)· எது முதலில் உயர்வது? நாய் தன் வாலைப் பிடிக்கச் சுற்றிச் சுற்றி வருகிற கதைதான் நடக்கிறது இப்போது !

இப்படியெல்லாம் இருந்தும்கூட ஒவ்வொரு நிமிஷமும் இறந்துவிடுவது போல் நடித்து நம்மைப் பயமுறுத்திக் கடைசி வரையில் ஏமாற்றி, இறுதியில் ஜாம் ஜாமென்று உயிருடன் நின்று சிரிக்கின்ற கதாநாயகனைப் போலவே நாடகமும் அழியாமல் பிழைத்துக் கொள்கிறது என்றால் அதற்குக் காரணம் சிவாஜி கணேசனின் நடிப்புத் திறன்தான்! சாதாரணமாக இருதய நோய் ஏற்பட்டால் மூன்று தடவைகளுக்குமேல் தாங்காது என்று டாக்டர்கள் சொல்லுவார்கள். அதனால் என்ன? நாடகம் சுபமாக முடிய வேண்டுமானுல் கதாநாயகன் உடம்பும் பூரண குணம் அடைந்து, எல்லாரையும் மகிழ்விக்க வேண்டியதுதானே?

துயரமும், வீரமும், பரிவும், பாசமும் பொங்க நடித்து மெய் சிலிர்க்க வைக்கிறார் சிவாஜி.

'காட்சிக்குக் காட்சி 'கிளைமாக்ஸ்' உருவாவதற்கு உணர்ச்சிமயமான கட்டங்கள் நிறைய வருவதனால் எதுவுமே மனத்தில் பதியாமல் போய் விடுமோ என்று யோசிக்க வேண்டியிருக்கிறது. சுவர்க் கடிகாரம் சதா மூன்றரை மணியே காட்டிக் கொண்டிருந்தது என் கண்ணை உறுத்தியது. ஏழை வீட்டுக் கடிகாரம் அப்படித்தான் சரியாய் ஓடாமல் இருக்கும் என்பதை உணர்த்தும் வகையில் அத்துடன் போராடிச் சமாளித்து விட்டார் சிவாஜி கணேசன்.

மாஜி சிப்பாயாக வந்த எஸ். ஏ. கண்ணன் நாடகத்துக்கே களை ஏற்படுத்தி விட்டார். அவரது மிடுக்கு நடையும், சிட்டாடும் ஆசையை விடமுடியாமல் அவர் பட்ட பாடும், தமாஷ் பேச்சும் எதிரிலேயே நிற்கின்றன.

உலகம் அறியாப் பெண்ணான தாராவின் பாகம் ஜி. சகுந்தலாவுக்கு ரொம்பப் பொருத்தமாக இருந்தது. பாத்திரத்தை உணர்ந்து நடித்தார். அத்தானுடைய மனம் வேறொருத்தியிடம் சென்றுவிட்டதை யறிந்து பேதை தாரா மனம் குமுறியது அற்புதமாயிருந்தது. நவநாகரிகப் பெண் கல்பனாவாகத் திலகம் ராஜகுமாரி வந்தார். ஆனால் ஏனோ சோபிக்கவில்லை. எல்லாப் பாத்திரங்களும் சோபித்துத்தானாக வேண்டும் என்பதில்லையே!

கண்ணனின் தம்பி முத்துவின் பாத்திரமும் எடுபடவில்லை.

''தேன் கூடு'' நாடகத்தைப் பெயருக்கேற்ப இனிமையாகப் புனைந்து, சுவையான வசனத்தையும் தீட்டியவர் ஜி. பாலசுப்பிரமணியம். ஒரு வீட்டில் வைத்தே நாடகத்தை நடத்தியிருப்பது நன்றாயிருக்கிறது.

நினைவில் நிற்கும் மற்றொரு பாத்திரம் கண்ணனின் மனைவி பாமா. படபடவென்று பொரிந்து கொட்டி அந்தப் பாத்திரத்தை ஏற்ற டி. பி. காமாட்சி நன்றாய் நடித்தார்.

''தேன்கூடு'' என்றால் அதில் தேனை மட்டும் எப்படி எதிர்பார்க்க முடியும்? தேனீக்களும் கொட்டுமல்லவா?




சின்னஞ் சிறு வயதிலேயே பெற்றோரை இழந்த ராஜாத்திக்கு அண்ணன் செல்லத் தம்பி உற்ற துணையா யிருந்து எடுத்து வளர்த்து ஆளாக்கி அவளுக்கு மணம் முடித்து வைக்க முயலும்போது நிரபராதியான ராஜாத்தியின் மீது வீண் பழி சுமத்தப்பட்டுக் கல்யாணம் தடைப்பட்டுப் போகிறது. அவமானம் தாங்காமல் செல்லத் தம்பி தற்கொலை செய்து கொள்கிறான். முதலில் நிச்சயம் செய்யப்பட்ட வரனே ராஜாத்தியை மணந்து கொள்கிறான். ஆனால் ராஜாத்தி தற்கொலை செய்துகொண்ட அண்ணன் நினைவாகவே சித்தப்பிரமை பிடித்து அலைகிறாள். கடைசியில் கணவனைக் காக்க, அவன் செய்துவிட்ட கொலையைத் தான் ஏற்கிறாள்.

செல்லத் தம்பியாக வரும் சிவாஜி கணேசன் முதலில் 'படிக்காத மேதை': இடைவேளைக்கு மேல் படித்துப் பட்டம் பெற்ற பாரிஸ்டர். பட்டிக்காட்டுச் செல்லத் தம்பியினால் சாதிக்க முடியாத காரியத்தை, பாரிஸ்டர் செய்து முடிக்கிறார்: ராஜாத்தி நிரபராதியென்று நிரூபித்து விடுகிறார். சிவாஜியின் நடிப்பின் சிறப்பைப் பல கோணங்களிலும் காண முடிகிறது. பட்டிக்காட்டு மனிதனாகக் கள்ளங் கபடின்றி யிருந்தவர், பாரிஸ்டராக வந்தபோது படிப்பின் பெருமையும், பண்பும் வெளிப்பட மிகவும் கண்யமாக நடிக்கிறார்.

சினிமாவில் பிரகாசிக்காத ஜி. சகுந்தலா "நீதியின் நிழ"லில் வானத்துத் தாரகையாய்ச் சுடர் விடுகிறார். மகிழ்ச்சியில் பெருகவும், உணர்ச்சியில் உருகவும், சிறுமையில் சிறுகவும் முடிகிற அவருக்குச் சித்தப்பிரமையில் உணர்ச்சியற்ற ஜடமாகவும் நடிக்க முடிவது பாராட்டுக்கு உரியது. மிராசுதாரின் மனைவியாக வரும் டி. பி. காமாட்சியின் நொடிப்பும் நடிப்பும் பலே ஜோர். திலகம் ராஜகுமாரி கொலை செய்யப்படும் அமுதாவாக வருகிறார். ஆனால் அவர் பேச்சு தெளிவாய்க் கேட்க முடியாதது பெரிய குறை. பாரிஸ்டரின் தாயாராக வரும் பி.எஸ். சீதாலட்சுமி தம் அபார நடிப்புத் திறமையினால் மறக்க முடியாத பாத்திரமாக்கிக் கொண்டு விட்டாரே! எதற்கும் எதிர்ப்புச் சொல்லி, வெட்டி வெட்டிப் பேசித் தனிப் பாணியை வகுத்துக் கொண்டு விட்ட அவருக்கு ஏற்ற விதத்தில் 'ஒத்து ஊதி' நாடகமேடையைப் பெருநகைப்பில் ஆழ்த்திய வக்கீல் குமாஸ்தாவையும் மறப்பதற்கில்லை! நடிகர் கே. வி. சீனிவாசன் அந்தப் பாத்திரத்தை ஜமாய்த்து விட்டார்! செல்லத்தம்பியின் தாத்தாவாக எஸ். ஏ. கண்ணன் அருமையாக நடித்தார்.



"நீதியின் நிழ"லின் நாடக ஆசிரியர் பால முருகன். இந்தச் சுவையான நாடகத்தின் வசனத்தையும் அவரே எழுதியிருக்கிறார். வெறும் மர்மக்கதையாகப் புனைந்து துப்பறிவதோடு முடிந்து விடாமல் நாடக பாத்திரங்களை நினைவில் வைத்துக் கொள்ளும்படி புனைந்திருக்கிறார்.

பல தமிழ்ப் படங்களில் காண முடியாத 'டெம்போ'வை 'நீதியின் நிழ'லில் கண்டு களிக்கலாம். கோர்ட் சீன் என்று ஒன்றை ஏற்படுத்தி அதைப் பிரசங்க மேடையாக்கி விடும் கொடுமையைப் பல படங்களில் பார்த்திருக்கிறோம். "நீதியின் நிழல்" அந்தக் கொடுமையிலிருந்து தப்பி யிருக்கிறது. கோர்ட் சீன் 'போர'டிக்கவில்லை.

ஆரம்பம் முதல் ஆவலைத் தூண்டும் விதத்தில் அமைந்திருக்கும் "நீதியின் நிழல்" நல்ல முறையில் நடத்தப்பெறும் நல்ல நாடகம்.



# தொந்தரவுக் குறிகள் உங்கள் காரிலே

என்னெய்க் கசிவுக் கறைகளா? நீர்த்தேக்கங்களா? இவை தொந்தரவுக் குறிகள்—அதாவது ஒழுக்குகள், நஷ்டங்கள் அபாயருமாகும். எனவே உங்கள் காரை உள்ளும் புறமும் அடிப் பாகத்திலுமாக ஒழுங்காகச் சோதனை செய்யுங்கள். மறைந்திருக்குப் கோளாறுகளை மிக நன்றாகச் சரியாக்குபவர்கள் மூலம் அதனைச் செய்யுங்கள். அதிகாரம்பெற்ற **எச்.எம்.** டீலர், பராமரிப்புச் செலவுகளை மட்டுப்படுத்துவதிலும், சிறப்பாக உங்கள் கார் உழைப்புத் தருவதிலும் உங்களுக்கு உதவி செய்யட்டும். மிக நவீன சேவை முறையிலும் பழுது பார்ப்பதிலும் தொழிற்சாலையில் பயிற்சி பெற்ற மெகானிக்குகள் அவரிடம் இருக்கின்றனர்.

**எப்போது வேண்டுமானாலும் உங்கள் காரை அவரிடம் ஓட்டிச் செல்லுங்கள் - பராமரிப்புக் கூபன்களை உபயோகியுங்கள்!**

**உங்கள் அம்பாஸடரை கவனித்துக் கொள்ளுங்கள்**

**HM APPROVED SERVICE**

உங்களுக்குச் சேவை செய்ய இந்தியாவெங்கும் ஏறக்குறைய 100 டீலர்கள் உள்ளனர்.

**ஹிந்துஸ்தான் மோட்டார்ஸ் லிட்., கல்கத்தா-1**

**விநியோகஸ்தர்கள்:** ஆக்ரா; அம்பாலா கன்டோன்மென்ட்; அஜ்மீர்; ஆமதாபாத்; ஆமட்நகர்; அலகாபாத்; அம்ருதஸரஸ்; பரோடா; பெங்களூர்; பிலாய்; பெர்ஹாம்பூர்; பம்பாய்; பரேலி; கல்கத்தா; கட்டாக்; கோயமுத்தூர்; கொழும்பு; தன்சார்; தும்கா; டேராடூன்; திப்ருகார்; தன்பாத்; கௌகாத்தி; குவாலியர்; கோவா; இம்பால்; இந்தூர்; ஜெய்பூர்; ஜபல்பூர்; ஜோத்பூர்; ஜல்கான்; ஜோர்ஹட்; ஜாம்ஷெட்பூர்; ஜலந்தர் சிடி; ஜம்மு; கான்பூர்; கோல்ஹாபூர்; கர்னால்; காட்மண்டு; கும்பகோணம்; லக்னோ; மதராஸ்; மதுரை; மங்களூர்; மீரட்; நாகபூர்; புதுடில்லி; நேபாளம்; பாட்னா; பூனா; பாண்டிச்சேரி; பாளையங்கோட்டை; பாடியாலா; ராஜ்கோட்; ராஞ்சி; சம்பல்பூர்; ஷில்லாங்; செகந்திராபாத்; சில்சார்; ஸ்ரீநகர்; லாட்டு; சிலிகுரி; தேஜ்பூர்; திருச்சிராப்பள்ளி; திருவனந்தபுரம்; தாரு வாரணாசி கன்டோன்மென்ட்; விஜயவாடா; விஜயநகரம்.

அட்டைப்படக் கதை

# கௌரவம்



டி. கே. டி. துரைராசன்

திரிகாலத்தையும் உணர வல்லவர்கள் ஞானிகள் என்பர். பரதன் இப்போது ஒரு ஞானிதான். நாளை நடக்கப்போவது என்ன என்று அவனுக்குத் தெரியும்.

இப்போது இரவு மணி பதினொன்று. எழும்பூரிலிருந்து புறப்பட்ட கடைசி எக்ஸ்பிரஸில் முதல் வகுப்பில் — தன்னந் தனியனாய் அல்லது தானும் தன் நினைவுச் சுழல்களுமாய் ஊருக்குப் போய்க் கொண்டிருக்கிறான் அவன். நாளை பதினொரு மணிக்கு வீடு போய்ச் சேர்ந்துவிடுவான். அன்பே உருவான அன்னை அவனை ஏற இறங்கப் பார்த்து விட்டு ''இளைச்சிட்டியே அப்பா!'' என்பாள். வழக்கமான வார்த்தை தான் அது.

தந்தை, தமக்கே உரிய செருமலுடன், வீடு முழுவதும் கேட்கும் வெண்கலத் தொண்டையில், ''வாடா!'' என்று மட்டும் வரவேற்பார்.

குளித்து விட்டுச் சாப்பிடுகிறவரைக்கும் ஒன்றும் நடக்காது.

பிறகு அவனுடைய கல்யாணப் பேச்சு எழப் போகிறது. தான் பார்த்திருக்கிற பெண்ணைப் பற்றி, அந்தப் பெண்ணின் பெற்றோர்களைப் பற்றி, அந்தப் பெற்றோர்களின் பாரம்பரியத்தையும், குடும்ப கௌரவத்தையும் பற்றித் தந்தை வர்ணிப்பார். விவரித்துவிட்டு, ''அந்தப் பெண்ணை உனக்குக் கட்டி வைக்கலாமுன்னு அபிப்ராயம்'' என்று ஒரு குண்டைத் தூக்கிப் போடுவார். இவன் தலையைக் குனிந்து கொண்டு மௌனியாய் நிற்கப் போகிறான்.

''என்னடா பேசாமல் இருக்கே?''

''ஒண்ணுமில்லேப்பா'' என்று மென்று விழுங்குவான் இவன்.

''அப்டின்னா உனக்குச் சம்மதம்தானே?'' தந்தையிடமிருந்து அந்தக் கேள்வி பிறக்கும். அது கேள்வியாகக் கூட இருக்காது. 'கோடு கிழித்து விட்டேன். தாண்ட நினைக்காதே' என்ற எச்சரிக்கையாகத்தான் தொனிக்கும்.

அப்போது பார்த்து அவனுக்கு நாக்கு மேலண்ணத்துடன் ஒட்டிக் கொண்டு சொல்ல வந்ததைச் சொல்ல முடியாமல் தவிப்பான். கடைசியில் ஒரு வழியாக ''அப்பா....'' என்று இழுப்பான்.

''சொல்லு.''

''சென்னையிலே என்னோட கல்லூரியிலே காந்திமதின்னு ஒரு பொண்ணு படிச்சது. ஒரு ஹைஸ்கூல் வாத்தியாரோட மக....''

''அந்தப் பொண்ணுக்கு என்ன?'' தந்தை உறும ஆரம்பிப்பார்.

''அந்தப் பொண்ணையே நானு...''

அவ்வளவுதான்; அவனால் சொல்ல முடியும். அதுவரைதான் அவரும் கேட்டுக் கொண்டிருப்பார். பிறகு வீடே அமளி துமளியாகப் போகிறது. நெடிதுயர்ந்து, ஆஜானுபாகுவாக விளங்கும் தந்தை துடியாகத் துடிக்கப் போகிறார். ''போச்சு... இந்தக் குடும்பக் கௌரவமே போச்சு...'' என்று பதறப் போகிறார். ''உன்னை என்ன செய்கிறேன், பார்'' என்று கர்ஜிக்கப் போகிறார்.

அந்தக் கர்ஜனைக்குப் பயந்தான் என்றால் இவன் காதல் அவ்வளவுதான். அஞ்சாமல் நின்றான் என்றால் இவன் பாடு அவ்வளவுதான். ''போடா வெளியே'' என்று துரத்தப் போகிறார். ''வாத்தியார் மகளாம்.... வாத்தியார் மகள். இந்த மிராசுக் குடும்பத்துக்கு — குடும்பத்தின் கௌரவத்துக்குச் சிறு துரும்பளவு மாசு கூட ஏற்படச் சம்மதிக்க மாட்டேன்'' என்று வெட்டு ஒன்று துண்டு இரண்டாக்கப் போகிறார்.

அதற்குப் பிறகு?....

சிந்தனையில் லயித்திருந்த பரதன் அதிலிருந்து சிரமத்துடன் மீண்டு கொண்டான். மேலே நடப்பதைப் பற்றி அவன் நினைக்கத் தயாரில்லை. அவன் நெஞ்சுக்கு அந்தத் தைரியம் இல்லை.

நினைவு காந்தியிடம் சென்றது. இந்நேரம் அவள் என்ன செய்து கொண்டிருப்பாள்? உறங்குவாளா? ஊஹூம்... அவளைக் கைப்பிடித்த நாளில்லவா அவளுக்கு உறக்கம்? காதலில் கட்டுண்ட பெண்ணுக்குப் பயம் — குழப்பம் — தயக்கம் இவைதானே தவிர ஏது உறக்கம்?

கல்லூரியில் படிக்கும்போதே இவர்களிடம் காதல் அரும்பியது.

பி. ஏ. படித்துவிட்டுக் காந்திமதி வீட்டோடு இருந்தாள். எம். ஏ. படித்து முடித்த பரதன் வேலை தேடுவதாகச் சொல்லிக் கொண்டு பட்டணத்திலேயே இருந்தான். **பணத்தைச் செலவுசெய்துகொண்டு செல்வம்**

செழித்த மிராசுக் குடும்பத்தின் ஒரே ஆண் மகன் அவன். அவனுக்கு இல்லாத பணம் வேறு யாருக்கு?

பரதனும் காந்தியும் தினம் தினம் சந்திப்பார்கள். 'நாள் முழுவதும் மாலைப் பொழுதாகவே இருக்கக் கூடாதா? — பேசிக் கொண்டே இருக்கலாமே' என்ற ஏக்கத்தோடு பிரிவார்கள்.

ஒரு நாள் காந்தி கேட்டாள்: ''உங்கள் தந்தைக்குக் குடும்பக் கௌரவம்தான் பெரிது என்கிறீர்களே. ஏழை வாத்தியார் வீட்டில் பெண்ணெடுக்க அவர் சம்மதிப்பாரா....?''

உயிர்க் கருவைத் தாக்குகிற நிதர்சனமான விஷயம். பரதன் பதில் பேசவில்லை.

''ஏன் பேசாமல் இருக்கிறீர்கள்?''

''ஒன்றுமில்லை காந்தி. பல நல்ல குணங்களைக் கொண்டவர்களுக்கு ஏதாவது ஒரு கெட்ட குணம் இருக்கும். குடும்ப கௌரவத்தின் மேல் கொண்டிருக்கும் பைத்தியம் என் தந்தைக்குள்ள ஒரே கெட்ட குணம்.''

காந்திக்குப் பயமாக இருந்தது. பரதனுக்கும்தான். பனி மலை இருப்பது தெரிந்தும் படகைச் செலுத்தத் தொடங்கிவிட்டார்கள். என்ன ஆகுமோ?

ரயிலின் அசைவில் பரதனுக்குக் கண்களைச் சுற்றியது. அயர்ந்து நித்திரை போனான்.

மறு நாள் மத்தியானம்.

வெந்நீரில் குளித்துவிட்டு விலாப் புடைக்க உண்டுவிட்டு, படுக்கையில் படுத்தவன்தான். எழும்போது மாலை ஆறு மணி இருக்கும்.

''பெரிய ஐயா கூப்பிடுறாரு'' என்று வந்தான் வேலைக்காரன். அவிழ்த்துக்கொண்டு ஓடப் பார்த்த தைரியத்தை விடாமல் பிடித்துக் கொண்டு தந்தை முன் வந்தான்.

பேச்சு எங்கெங்கோ போய்விட்டுக் கடைசியில் எந்த இடத்துக்கு வர வேண்டுமோ, அங்கே வந்து சேர்ந்தது.

''பரதா! இடையப்பட்டி மிராசை உனக்குத் தெரியுமோ?''

சத்தியமாக அவனுக்குத் தெரியாது. இருந்தாலும் ''தெரியும்'' என்று சொன்னான்.

''அவர் மகள் பத்மாவைப் பார்த்திருக்கிறாயோ? மதுரையிலே கல்லூரிப் படிப்புப் படிச்சது.''

முன்னெச்சரிக்கையாக, ''தெரியாதப்பா'' என்றான் பரதன்.

''நல்ல பெண். லட்சணமான பெண். அவளை உனக்குக் கேட்கலாம் என்று உம் அம்மாவுக்கும் எனக்கும் அபிப்பிராயம்.''

ஆயிற்று. 'டைம்பாம்' வெடிப்பதற்கு நேரத்தைக் கணக்கிட்டு வைப்பார்களே இதோ அந்த நேரம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. இன்னும் சில நிமிஷங்கள்தாம்.

''என்னடா பேசாமெ இருக்கே?''

''ஒண்ணுமில்லேப்பா.''

''அப்படின்னு உனக்குச் சம்மதம்தானே?'' தந்தையின் குரலில் கொஞ்சம் அழுத்தம் இருந்தது. அவர் முகத்தைப் பரதன் அப்பொழுதுதான் ஏறிட்டுப் பார்த்தான். பயத்தில் அது பழைய முகமாகவே படவில்லை. புதிய முகமாக — அதுவும் இதுவரையில் இல்லாத மிடுக்கும் அந்தஸ்தும் பொதிந்து விளங்கும் புதிய முகமாகப் பட்டது.

அவரிடம் என்ன சொல்வது? எப்படிச் சொல்வது? அவன் சொல்வதை அவர் எங்கே கேட்கப் போகிறார்? அவர் கேட்க மாட்டார் என்பதற்காகச் சொல்லாமல் இருக்க முடியுமா? எப்படியும் சொல்லியே தீர்வது என்று மனத்தைத் திடப்படுத்திக் கொண்டான். மெதுவாகக் குரலைக் கனைத்துக்கொண்டு ''அப்பா!'' என்றான்.

''என்னடா?''

''நீங்க தப்பா நெனைக்கலேன்னா.....''

''சும்மா சொல்லு.'' மகனுடைய வாயில் அடைபட்டுக் கிடக்கும் வார்த்தைகளுக்கு வாய்க்கால் வெட்டி விட்டார் அவர்.

''நான் காலேஜிலே படிச்சப்ப என்கூடக் காந்திமதின்னு ஒரு பொண்ணு படிச்சது. இப்ப அது பி. ஏ. பாஸ் பண்ணிட்டது. ஒரு ஹைஸ்கூல் வாத்தியார் மகள்.''

பரதன் தன் பேச்சை நிறுத்திக் கொண்டான். தைரியத்தை வரவழைத்துக் கொண்டு தந்தையை நிமிர்ந்து பார்த்தான். இவ்வளவு சொல்லத் தந்தை தன்னை அனுமதித்து விட்டாரே என்று வியந்து திகைத்தான். தன் உள்ளத்தில் உள்ளதைத் தந்தையிடம் சொல்லலாமா, வேண்டாமா? — மீண்டும் அவன் மனத்தை யோசனை பிடித்தது. அதைச் சொல்லித் தந்தையை எரிமலையாக்குவானேன் என்று அவன் குழம்பிய நேரத்தில் ''அந்தப் பொண்ணுக்கு என்ன?'' என்று கேட்டார் அவன் தந்தை. அவர் கேள்வியில் கொஞ்சம் சூடு பிடித்திருந்தது.

''ரொம்பவும் நல்ல பொண்ணு. அம்மா மனசும் — உங்க மனசும் கோணாமெ நடந்துக்கும். அவ்வளவு தங்கமான பொண்ணு'' என்றான் பரதன்.

''அந்தப் பொண்ணுக்கு என்னடா?''

''நான் அந்தப் பொண்ணை.... அவளுக்கு நான் வாக்குக் குடுத்துட்டேன்.''

''என்னான்னு?''

'' உன்னையே கலியாணம்.....!''

''ஓஹோ!'' தந்தையின் விழிகள் வீட்டு முகட்டில் பதிந்தன. புயல் உருவாகிறது என்று யூகித்து விட்டான் பரதன். எப்படி எல்லாம் ஆத்திரத்தோடு அனல் கக்கும் வார்த்தைகளைக் கொட்டப் போகிறார் தன் அப்பா என்று அந்தக் காட்சியை மனத்திரையில் ஓடவிட்டான்.

''அப்பா! அந்தப் பொண்ணு என்னையே நம்பியிருக்கு. நான் துரோகம் பண்ணினா...''

மேலே பார்த்தவாறே தந்தை தலையை அசைத்தார். ''கூடாது, கூடாது'' என்று அவர் வாய் முணுமுணுத்தது.

பரதனுக்கு அழுகையே வந்து விடும்போல் இருந்தது. ''அப்பா! ஆசை ஆசையா வளர்த்து என்னை ஆளாக்கினீங்க.... என்னுடைய இந்த ஒரே ஆசையை.....''

தந்தை இப்போது மகனைப் பார்த்தார்.

''என்னடா உளர்றே..... இப்ப யார் உன்னை என்ன சொல்லிட்டாங்கன்னு அழப் போறே ? நீ அவளுக்குத் துரோகம் பண்ணக் கூடாதுன்னுதான் சொல்ல வந்தேன்.''

உலகமே மாயை என்கிறார்களே, அது தானோ இது என்று நினைத்து விட்டான் பரதன்; ''அப்பா!'' என்று கூவினான்.

# பழக்கப்பட்ட பேச்சாளர்?




''ஆமாடா! மனப்பூர்வமா சொல்றேன். காந்திமதியை நான் மருமகளா ஏத்துக்கிடறேன்.'' — அவர் முகமெல்லாம் புன்னகையாய் மலர்ந்தது.

அவ்வளவுதான்; தந்தையின் கால்களைத் தாவிப் பிடித்தான் பரதன்.

''பைத்தியம், பைத்தியம்! எழுந்திருடா'' என்று அவனை நிமிர்த்தினார் தந்தை.

''அப்பா! அப்பா! எனக்கு என்ன சொல்றதுன்னே தெரியலேப்பா! குடும்ப கௌரவம், குடும்ப கௌரவம்னு சொல்லி எங்கே எங்களுடைய ஆசையை நிராசையாக்கி விடுவீங்களோன்னு பயந்தேன்'' என்று உருகினான் பரதன்.

''போடா மடையா! சொன்ன வாக்கைக் காப்பாத்தறதும் குடும்ப கௌரவம்தான். காந்திமதிக்கு நீ துரோகம் செய்தா அதைவிட இந்த மிராசுக் குடும்பத்துக்கு வேறு என்ன அகௌரவம் வேண்டும்?'' என்றார் தந்தை.

ஆம்! அவருக்குக் கௌரவம்தான் பெரிது!

# மக்லீன்ஸ்

உபயோகித்து
அந்த அதிகமான வெண்மையைப்
பாருங்கள்!





### இவ்விதம் சோதியுங்கள்

1. உங்கள் நாக்கினால் பற்களைத் தடவுங்கள். அவற்றின் மேலுள்ள பாசியை உணர்கிறீர்களா?
2. இப்போது, மக்லீன்ஸ் பற்பசைகொண்டு பற்களைத் தேயுங்கள். அது பற்களைச் சுத்தம் செய்து, வெண்மையாகக் காப்பதுடன் உங்களுக்குப் புதுமையான உணர்ச்சியை அளிப்பதை உணர்வீர்கள்.
3. அந்த அதிகமான சுத்தத்தை உணருங்கள்... அந்த அதிகமான வெண்மையைப் பாருங்கள்.




மக்லீன்ஸ் பழுப்பு நிறமடைந்த
பற்களை வெண்மையாக்குகிறது!





1. மதுரை பாரதி புத்தக நிலையத்தார் தயாரித்துள்ள பாரதியாரின் கதை, கட்டுரை, கவிதைத் தொகுதிகளை நாமக்கல் கவிஞர் வெளியிட்டார். 2. வர்ணக் கோலத்திலேயே விவேகாநந்தரை உருவாக்கிய ரங்கோலி கண்காட்சியைச் சென்னை கவர்னர்பார்வையிடுகிறார். 3. சென்னை கர்நாடக சங்கீத மத்தியக் கல்லூரியில் நடைபெற்ற ரவி சங்கரின் சித்தார்க் கச்சேரி. 4. சென்னை சத்தியமூர்த்தி பவனில் நடைபெற்ற பாரதியார் விழாவில் நாமக்கல் கவிஞருக்கும் பரலி சு. நெல்லையப்பருக்கும் பி.ஸ்ரீ. ஆச்சாரியாவுக்கும் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தனர். 5. விவேகாநந்தர் நூற்றாண்டு விழாவில் கல்கி துணை ஆசிரியர் ரா. கணபதி அவர்கள் எழுதியுள்ள விவேகாநந்தர் வாழ்க்கைச் சரிதத்தை ராஜாஜி வெளியிடுகிறார். 6. இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்கியின் புதிய கட்டடத்தை மந்திரி திரு ஸி. சுப்பிரமணியம் திறந்து வைத்தார். 7. புருக் பாண்ட் ஸ்தாபனம் நடத்திய தேநீர் வினா விடைப் போட்டியில் வென்றவர் பரிசு பெறுகிறார்.







# குண்டு மல்லிகை



ஜகந்நாதன் தன் எண்ணங்களை அப்படியே பிரதிபலித்துச் சொன்னதைக் கண்டு வசந்தி அதிவியப்புடன், ஜகந்நாதனைக் கூர்ந்து பார்த்து, "ஒரு நாள் மெரீனு பீச்சில் என் கல்லூரித் தோழிகளிடம் தானே அப்படியெல்லாம் பேசினேன்? நீங்கள் மனப்பாடம் செய்தது போல் திருப்பிச் சொல்கிறீர்களே? அப்போது நீங்கள் அங்கே உலாவியல் படலம் நடத்திக் கொண்டிருந்தீர்களோ?" என்று கேட்டாள்.

"இல்லை! ஒரு புறம் உட்கார்ந்து ஒட்டுக் கேட்கும் படலத்தில்தான் ஈடுபட்டிருந்தேன்! காலேஜ் பெண்கள் நாலைந்து பேர் ஒன்ருகச் சேர்ந்தால் எதைப் பற்றிப் பேசுவார்கள் என்பதை ஒட்டுக் கேட்பதில் எனக்கு அலாதியான சுவாரசியம் உண்டு! ஆகவே காற்றினில் மிதந்து வந்த உன் கிளை மொழிகள் என் காதில் விழுந்து என் கருத்தில் பதிந்தன!" என்று கூறினுர் ஜகந்நாதன்.

வசந்தி அவரைப் புதிய கோணத்தில் பார்க்க ஆரம்பித்தாள்.

ஜகந்நாதன் புன்முறுவலுடன் தொடர்ந்து கூறலானுர். "உன் சித்தாந்தத்தை உடனே நடைமுறையில் பரீட்சித்துப் பார்க்க முயன்ருய்! அதற்கு முதல் பலியானவன் ஒரு குடை வள்ளல்...!"

வசந்திக்கு மேலும் தூக்கிவாரிப் போட்டது!

ஜகந்நாதன் மேலும் சிரித்துக் கொண்டே, "அந்தக் குடைவள்ளல் கர்ண மகாராஜா பரம்பரையில் பிறந்தவனே என்னவோ, உன் அதிர்ஷ்டம் அவன் உன் வீட்

டுக்குப் பக்கத்துவீட்டில் குடியிருந்தான்! அவன் பெயர் சங்கர்! ஒரு நாள் மழை பெய்யும்போது தெரு வழியே போய்க் கொண்டிருந்த அவன் உனக்குக் குடை கொடுத்து உதவினான்! கொடையில் பிறந்த காதல் குடையோடு போய் விடும் என்று நினைத்தாய் நீ! ஆனால் அந்தக் காதல் சங்கருக்கு அதிதீவிரமாகி உன் வீட்டுக்குள் அவனைச் சுவரேறிக் குதிக்க வைத்தது! இரவு நேரத்திலே, வீட்டில் யாரும் இல்லாத வேளையிலே, நிலா வெளிச்சத்திலே, மாடியிலுள்ள உன் தனியறைவரை அவனைக் கொண்டு வந்து நிறுத்தியது.....'' என்று சொல்லி நிறுத்தி விட்டு வசந்தியைக் கூர்ந்து பார்த்தார்.

வசந்தி அப்படியே தன் முகத்தைத் தன் இரு கைகளாலும் பொத்திக் கொண்டு தலை குனிந்தாள்.

''வசந்தி! அந்தச் சங்கர் உன்னிடம் அப்போது பேசிய உணர்ச்சிகரமான வசனங்கள், நீ கூறிய உபதேசங்கள், கடைசியில் 'காதல் என்பதே ஓர் அடிமைத்தனம்' என்று நீ தெளிவாக எடுத்துரைத்து அவனை அழ வைத்து அனுப்பியது, அத்தனையும் எனக்குத் தெளிவாகத் தெரியும்! ஆனால் இதெல்லாம் எனக்கு எப்படித் தெரியும்; ஆனால் நானென்ன எங்கும் நிறைந்த ஜகந்நாதப் பெருமானா என்று மதி குழம்பிக் கொண்டிருக்கிறாயா?''

''ஆமாம்'' என்று தலையாட்டிய வசந்தி, ''உங்களிடம் அந்த முட்டாளே வந்து உளறினானா? அல்லது நீங்களும் பின்தொடர்ந்து வந்து என் வீட்டுக்குள் சுவரேறிக் குதித்தீர்களா?'' என்று வெடுக்கென்று கேட்டாள்.

''இல்லை! அந்த முட்டாள் உயிர் விடுவதற்காக மூட்டைப் பூச்சி மருந்து வேண்டுமென்று என் 'டிஸ்பென்சரி'க்கு வந்து சேர்ந்தான்! அவனைப் போன்ற ஓர் ஆண் அழகன் உணர்ச்சிகரமான வாலிபன், எதிர்காலப் புகழில் தன்னம்பிக்கை உள்ளவன், திடீரெனத் தற்கொலை செய்து கொள்ளத் துடிக்கிறான் என்றால் அது அவனுடைய காதல் சம்பந்தப்பட்ட விவகாரமாகத்தான் இருக்கவேண்டுமென்று நான் யூகித்தேன்! பிறகு தூண்டித் துருவித் துருவிக் கேட்டு விசாரித்து எல்லாவற்றையும் தெரிந்து கொண்டேன்! தன்னைக் காதலிக்காத ஒரு பெண்ணுக்காகத் தற்கொலை செய்து கொள்வது ஒரு மூட்டைப் பூச்சிக்காக உயிர் விடுவதை விட முட்டாள்தனம் என்று அவனுக்கு நான் உபதேசம்செய்து எதிர்காலத்தில் அவன் சிறந்த நடிகனாகத் திகழ்வதற்குத் தேவையான நற்சாட்சிப் பத்திரங்களையெல்லாம் வழங்கி அவனை வழியனுப்பி வைத்தேன்! அவன் என்னைக் குருவாக மதித்துப் புதிய ஞானோபதேசம் பெற்ற சிஷ்யனாகப் புறப்பட்டுச் சென்றான்! அவன் என்றாவது ஒரு நாள் பெரும் புகழோடும் திரும்பி வந்தால் உன்னைப்



அரு.ராமநாதன்

பார்த்துச் சிரிப்பான்! அதாவது உன் அழுகையைப் பார்த்துச் சிரிப்பான்!'' என்று ஜகந்நாதன் ஓர் அர்த்தபுஷ்டி யோடு சொல்லி விட்டு, ''வசந்தி! உன் காதல் சித்தாந்தத்தின் பரீட்சைக்கு முதல் பலியாக உணர்ச்சிகரமான ஒரு முட்டாளைத் தேர்ந்தெடுத்ததுதான் அப்படி வினையாகப் போய்விட்டது. அதற்குப் பதில் ஓர் அறிவாளியை நீ தேர்ந்தெடுத்திருந்தால் வேடிக்கையாக இருந்திருக்கும்!'' என்று விஷமமாகக் கூறிச் சிரித்தார்.

வசந்தி விருட்டென்று எழுந்தாள்.

''என் மீது கோபமா வசந்தி?''

''உங்கள் மீது எனக்கென்ன சார் கோபம்?''

''ஒரு வேளை நீ இங்கே வராமலே இருந்து விடுவாயோ?''

''நான் எதற்கு ஸார், இங்கே வர வேண்டும்?''

''வசந்தி, நீ கோபித்துக் கொண்டாலும் சரி, உன்னிடம் உண்மையான ஒரு விஷயத்தைச் சொல்லி விடுகிறேன். உன் அக்கா உமாவின் கால் குணமான பிறகும் அவளை 'டிஸ்சார்ஜ் செய்து' வீட்டுக்கு அனுப்பாமல் இங்கே என் நர்ஸிங்ஹோமிலேயே ஏன் தங்கச் செய்திருக்கிறேன், தெரியுமா?''

''ஏன் டாக்டர்?''

''உன் அக்காவைப் பார்ப்பதை முன் னிட்டாவது நீ அடிக்கடி இங்கே வருவாய்! அப்போதெல்லாம் உன்னை நான் சந்தித்துப் பேசலாம் என்பதால்தான்!'' என்று ஜகந்நாதன் தழுதழுக்கும் குரலில் அவளைக் கூர்ந்து பார்த்துக்கொண்டே சொன்னார். அந்தப் பார்வையிலும் குரலிலும் இப்போது ஒரு புதிய தாபம் தொனித்தது.

வசந்தி நாணத்தோடு நெளிந்தாள். அவள் உதடுகளில் ஒரு புன்முறுவல் பூத்தது.

அந்தப் பாவனையை ஜகந்நாதன் உற்சாகமாகப் பார்த்துக் கொண்டே, ''வசந்தி! நான் அந்தச் சங்கராக இருந்தால் குடை வள்ளலாக மாறியிருக்க மாட்டேன்! நீ மழையில் நனைந்தபடி சைக்கிளை ஓட்டிச் செல்லும் அழகை ரசிக்கும் கலைஞனாக மாறி யிருப்பேன்! அதுதான் எனக்கும் சுவாரசியமாக இருந்திருக்கும்! உனக்கும் சுவாரசியமாக இருந்திருக்கும்! ஏனெனில், ஒருத்தி தனக்கு ஓர் ஆடவன் குடை உதவி செய்வதை விடத் தன் அழகை ரசிப்பதைத்தான் பெரிதும் விரும்புவாள், இல்லையா?'' என்றார்.

வசந்தி தன் விழிகளை மலர விரித்தபடி அவரை ஒரு முறை ஆழ்ந்து உற்றுப் பார்த்தாள். அடுத்தகணம் வெற்றியின் களிப்போடு அந்த அறையிலிருந்து 'விர்' ரென்று ஓடி விட்டாள்.

அவள் ஓடி மறைந்ததும் ஜகந்நாதன் தம் மனத்துக்குள் சிரித்துக் கொண்டார்.

### அத்தியாயம் முப்பத்தொன்று

## ஜீவத் துடிப்பு

டாக்டர் ஜகந்நாதனின் நர்ஸிங் ஹோமிலிருந்து 'டிஸ்சார்ஜ்' ஆகி உமா தன் வீட்டுக்கு வந்ததும் வழக்கம் போல் திரிபுரசுந்தரி அம்மாளின் குழந்தைகளுக்கு டியூஷன் சொல்லிக் கொடுக்கும் பணியில் ஈடுபட்டாள்.

ஆனால் முன் போல் அவள் மனத்தில் அமைதியில்லை. அது ஏன் என்பது அவளுக்குப் புரியவில்லை. ஒருவேளை பிச்சுமணி அடிக்கடி அவள் கண் முன் சஞ்சரிப்பது ஒருகாரணமாக இருக்குமோ...?

டியூஷன் குழந்தைகளின் தகப்பனாரான வக்கீல் பீதாம்பரம் ஒரு வீணைப் பைத்தியம்! சதா மாடியறையிலேயே நோயாளியாகப் படுத்திருக்கும் அவருடைய சம்சாரம் திரிபுரசுந்தரி அம்மாளுக்கும் வீணையின் நாதமென்றால் இதயத்துக்கு இதமளிக்கும். அதை முகாந்திரமாக வைத்துப் பிச்சுமணி அவர்களைச் சிநேகம் பிடித்துக்கொண்டு அவர்களுடைய குழந்தைகளுக்கும் சாக்லெட் கொடுக்கும் அத்தியந்த நண்பனாகி, அடிக்கடி அந்த வீட்டுக்கு வந்து வீணா கானம் பொழிய ஆரம்பித்தான். கர்ணாமிர்தமான அந்தக் கானத்திலோ ராதையை மயக்கும் கண்ணனின் வேணு கானத்தைப் போல் ஒரு காந்த சக்தி குடியிருந்து உமாவின் நெஞ்சைக் கவர்ந்திழுக்கும். அந்த இசை வெள்ளத்தில் மனம் ஒன்றி உணர்வெல்லாம் கனிந்து உமாவின் கண்களில் நீரும் துளிர்க்கும்.

உமாவுக்குக் கால் குணமாகி முன் போல் நடக்க வந்து விட்டது என்றாலும் இரண்டு நாட்களுக்கு ஒருமுறை சாந்தோமிலுள்ள நர்ஸிங் ஹோமுக்கு வந்து பரீட்சித்துக் கொள்ள வேண்டுமென்று டாக்டர் ஜகந்நாதன் சொல்லி


தேய்ந்துபோன
டயர், மேலும்
40,000
மைல்
உழைக்கலாம்

யிருந்தார். அதன் பிரகாரம் ஒரு நாள் மாலை நேரத்தில் நர்ஸிங் ஹோமுக்கு உமா போய்விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தாள். வழியில், சாந்தோம் மாதா கோவிலில் மணி அடிக்கும் ஒலி கேட்டது. அதன் கம்பீரமான நாதம் திக்கெங்கும் பரவிக் கருணை மயமான பக்திப் பரவசத்தை எழுப்பியது.

உடனே சிலுவையில் அறையுண்ட ஏசுநாதரின் திரு உருவம் உமாவின் மனக் கண் முன் வந்து நின்றது. ஏசுநாதர் அன்பை உபதேசித்தார். அதற்காகவே தியாக வழியையும் மேற்கொண்டார். புத்தர்பிரானும் அதே அன்புக் கொள்கையைக் கைக்கொண்டு மனித ஜாதியிடம் மட்டுமல்ல; சகல ஜீவராசிகளிடமும் கருணை காட்ட வேண்டும் என்று ஜீவகாருண்ய வழியை உலகுக்குப் போதித்தார். அவர் ஆட்டுக் குட்டி ஒன்றைத் தம் இரு கைகளாலும் எடுத்து அன்புடன் அணைத்துக் கொண்டிருப்பது போன்ற படம் ஒன்றை உமா தன் வீட்டில் மாட்டியிருந்தாள். அந்தப் படத்தைப் பார்க்கும்போதெல்லாம் புத்தர்பிரானின் கையணைப்பிற்குள் தாயன்பைக் காணும் ஆட்டுக் குட்டியின் விழிகள் உமாவின் நெஞ்சைத் தொடும். அந்த ஆட்டுக் குட்டியின் உருவம் மறைந்து அது புன்முறுவல் பூக்கும் ஒரு பச்சைக் குழந்தையைப் போல் மாறிப் பிரமையூட்டும். அவள் தன் சித்தியின் கைக்குழந்தையை எடுத்து அருமையாக வளர்த்தது, அதோடு கொஞ்சி விளையாடியது, கடைசியில் அதை அநியாயமாகச் சாவு பறித்துக் கொண்டது எல்லாம் அவள் நினைவுத் திரையில் படரும். அந்தக் குழந்தையின் கண்களில் மின்னிய அந்த அன்பின் ஒளியும், கள்ளம் கபடற்ற புன்முறுவலும்தான் ஆட்டுக் குட்டியின் கண்களிலும் ஒளி வீசுவதாகத் தோன்றும். அப்போது சகல ஜீவன்களும் ஒன்றுதான் என்ற தத்துவத்தை உமா திரிசனமாக உணர்வாள்.

அன்று காலையில் பெருமழை பெய்து ஓய்ந்து தெருவின் இருமருங்கும் ஆங்காங்கே தண்ணீர் தேங்கி யிருந்தது. மாலை நேரத்தில் மறுபடியும் மழை எந்த நிமிஷமும் பெய்யும் என்பதற்கு அறிகுறியாக வானம் இலேசாக இடி முழக்கங்களுடன் பயமுறுத்தியது.

சாந்தோம் வட்டாரத்தில் உள்ள ஒரு தெருவில் உமா திரும்பும் போது வர்ணக் குமாரியின் புன்முறுவல் முத்துக்களைப் போல் இலேசாக மழைத் தூறல்கள் விழ ஆரம்பித்தன. பெருமழை பிடித்துக் கொள்வதற்குள் எங்காவது ஓடி ஒதுங்க வேண்டும் என்று உமா புகலிடம் தேடி அவசர அவசரமாகச் சுற்றும் முற்றும் பார்த்தாள். சற்றுத் தொலைவில் பிரும்மாண்டமான ஒரு பங்களாவின் தோட்டத்துக் காம்பவுண்டுச் சுவரும் அதன் அகன்ற வாசலருகில் சுவரைத் தாண்டிக் கொண்டு ஒரு கூரையின் பிதுக்கமும் தென்பட்டன.

உமா விரைந்தோடி அந்தக் கூரைக் கடியில் ஒண்டி நின்றாள். ஜில்லென்ற மழைக் காற்று அடித்தது. அந்திச் சூரியனின் கடைசி ஒளி வானத்தின் விளிம்பில் மடிந்து கொண்டிருந்தது.

இடி முழக்கம் சிறிது ஓய்ந்தபோது காம்பவுண்டுச் சுவரின் உட்புறம் ஏதோ ஒரு ஜீவன் உயிருக்குத் துடிப்பதுபோல் பரிதாபமான ஓசை கேட்டது. அது உமாவின் நெஞ்சைச் சுண்டியிழுத்தது.

உமா விரைந்தோடிக் காம்பவுண்டின் விசாலமான வாசல் முன் நின்று உள்ளே எட்டிப் பார்த்தாள்.

உள்ளே ஒரு புறம் ஆட்டுக் குட்டி ஒன்று அடித்து நொறுக்கப்பட்ட நிலையில் சகதியில் விழுந்து கிடந்தது. பிச்சுமணியின் தாத்தா மேஜர் ராமதுரை தான் ஒரு நீளமான சவுக்கால் அந்த ஆட்டுக்குட்டியை அப்படி அடித்து நொறுக்கித் தள்ளி யிருந்தார். பல நாட்களாக அவர் தோட்டத்துக்குள் அத்துமீறி நுழைந்து அவருடைய அதட்டலையும் மிரட்டலையும் அலட்சியப்

படுத்தி அவருடைய கைக்குச் சிக்காமல் தந்திரமாகத் தப்பி ஓடித் திரிந்த அந்த ஆட்டுக் குட்டி அன்று துரதிருஷ்டவசமாக அவரிடம் சிக்கிக் கொண்டு விட்டது. பல நாட்களாக அதன்மீதுள்ள ஆத்திரத்தோடு தம் பேரனும் அந்த ஆட்டுக் குட்டியைப் போலவே தம்மை அலட்சியப்படுத்தி ஏதோ ஒரு பெண்ணுக்காக ஏங்கித் திரிகிறான் என்ற ஆத்திரமும் சேர்ந்து கொள்ளவே, இரண்டு வித ஆத்திரத்தையும் அந்த ஆட்டுக்குட்டியின் மீதே காட்டித் தீர்த்துக் கொள்ள முயன்றார். அந்த அற்ப ஜீவன் அடிபட்டுச் சகதியில் விழுந்து 'மே, மே, மே' என்று கத்துவதற்குக் கூடச் சக்தியின்றி உயிர் தத்தளிக்கும் நிலையில் கிடந்தபோதிலும் கூடக் கிழவருக்கு ஆத்திரம் அடங்கவில்லை. அதை அன்று எப்படியும் தீர்த்துக் கட்டிவிடுவது என்றே அவர் தீர்மானித்து விட்டார். அது மறுபடியும் கொஞ்சம் எழுந்திருக்க முயன்றால் பளீரென்று சவுக்கால் அடித்து அதன் காலை ஒடித்து விடுவதற்குத் தயாராகக் கையில் சவுக்கை ஓங்கிப் பிடித்தபடி யமகிங்கரன் போல் நின்று கொண்டிருந்தார்.

அந்தக் காட்சியைக் கண்டதும் உமாவுக்குப் பொறுக்க முடியவில்லை! ஜீவகாருண்யத்தைப் பற்றியே சிந்தித்தபடி நடந்து வந்த அவள், வழியில் அப்படிப்பட்ட ஜீவஹிம்சையைத் தன் கண் முன்னால் காண நேரிடும் என்று எதிர்பார்க்கவில்லை. உயிருக்குத் துடிக்கும் அந்த ஆட்டுக்குட்டி ஒரு கைக்குழந்தையாக மாறிப் பயங்கரமான ஒரு மிருகத்தால் தாக்கப்படுவது போலவும், தன்னைக் காப்பாற்றும்படி உமாவை நோக்கி அபயக் குரல் எழுப்புவது போலவும் அவளுக்கு ஒரு பிரமை தட்டியது. அதே சமயம் புத்தர்பிரான் தன் இரு கைகளாலும் ஓர் ஆட்டுக் குட்டியைத் தூக்கிக் கொண்டிருக்கும் படம் அவள் நினைவில் மோதி எழுந்து அதே போல் இந்த ஆட்டுக் குட்டியையும் தன் இரு கைகளாலும் தூக்கியெடுத்து அதற்கு அன்பு காட்ட வேண்டும் என்ற ஆவலும் அவளை உந்தித் தள்ளியது.



''எங்கப்பா நிலக்கரிச் சுரங்கத்துக்கு மானேஜராக்கும்!''

''உன் நிறத்தைப் பார்த்தாலே தெரிகிறதே! நீ சொல்ல வேறு வேண்டுமா, என்ன?''

அதனால் உமா தன்னை மறந்து, ''ஐயோ! அதைக் கொல்லாதீர்கள்'' என்று கத்தினாள்.

மேஜர் ராமதுரை திடுக்கிட்டார். தம்மிடம் சிக்கிய எதிரிக்கு உதவியாக அன்னியமான ஒரு குரல், அதுவும் ஒரு பெண் குரல் பாய்ந்து வருவது அவருடைய உள்ளத்தில் சுருக்கென்று தைத்தது. உடனே விசையால் முடுக்கப்பட்டவர் போல் அவர் குதித்துத் தம் கையில் உள்ள சவுக்கை அதி வேகமாகச் சுழற்றி ஆட்டுக் குட்டியின்மீது பளீரென்று அடித்தார்.

ஆட்டுக்குட்டி தன் பிராணன் கிழிவது போல் வீறிட்டு அலறியது.

'' ஐயா! நிறுத்துங்கள்! நிறுத்துங்கள்!'' என்று கூவிய உமா அந்தக் 'காம்பவுண்டு கேட்'டின் கதவைத் தள்ளித் திறந்துகொண்டு உள்ளே பாய்ந்து செல்ல முயற்சி செய்தாள். ஆனால் இரும்புக் கம்பிகளால் பிணையப்பட்ட அந்தக் 'கேட்' உட்புறம் தாளிடப்பட்டிருந்ததால் அதை உமாவால் தள்ளித் திறக்க முடியவில்லை. ஆட்டுக் குட்டி பிராணவஸ்தையுடன் எழுப்பும் அபயக் குரலோ, அவள் அருமையாக வளர்த்து அநியாயமாகச் சாவுக்குப் பலி கொடுத்த சித்தியின் கைக்குழந்தை கடைசியாக அவளைக் கூப்பிடும் முனகல் குரல் போலவே அவளுடைய நெஞ்சில் எதிரொலித்து அவளை அதிவேகமாகக் கண்டி இழுத்தது.

உமா உடனே தன்னையும் மறந்து விர்ரென்று ஓர் ஆவேசத்தோடு இரும்புக் கேட்டின் மீது ஏறலானாள். தன் உடம்பின் பலமனைத்தையும் தன் கைகளில் திரட்டிக் கொண்டு இரும்புக் கம்பிகளைப் பிடித்துக் கொண்டு மேலே ஏறி உள்ளே குதித்தாள். அப்போது இரும்புக் கம்பிகளின் துருப் பிடித்த முனைகளும், கூர் ஆணிகளும் உராய்ந்து கீறியதால் அவளுடைய ஆடையில் இலேசான சில கிழிசல்களும் கைகளில் மெல்லிய கீறல்களும் விழுந்தன. கீழே குதிக்கும்போது மண் தரையில் தேங்கியிருந்த மழைத் தண்ணீரும் சகதியும் தெறித்து அவள் மீது அபிஷேகம் செய்தன. ஆனால் உமா அவற்றையெல்லாம் பொருட்


பனாமா
ஸேப்டி
ரேஸர்
ப்ளேட்கள்
அதி சுத்தமான, வழவழப்பான
க்ஷவரத்திற்கு
நாடெங்கணும் லட்சக்கணக்கான மக்கள் பனாமாவை உபயோகிக்கிறார்கள். அது வழவழப்பான, சுகமான க்ஷவரத்திற்கான சிறந்த ஸேப்டி ரேஸர் ப்ளேட். உங்கள் பணத்திற்கு அதிக மதிப்பைப் பெற பனாமாவிற்கு மாற்றிக் கொள்ளுங்கள்.
HAVE YOU MADE A TRIAL YET WITH THE WELL KNOWN "PANAMA" RAZOR BLADES? IF NOT IT IS TIME TO DO SO!
PANAMA
பனாமா
ஸேப்டி ரேஸர் ப்ளேட்

படுத்தவில்லே. வேகமாக ஆட்டுக் குட்டியை நோக்கி ஓடிப் பாய்ந்து அதைத் தன்னிரு கைகளாலும் தூக்கினுள். தான் வளர்த்த சித்தியின் கைக்குழந்தையைச் சாவிலிருந்து மீட்டுத் தன் கைகளால் அணேத்துக் கொண்டிருப்பதைப் போன்ற இதமும் உணர்ச்சிப் பெருக்குமே அப்போது அவளுக்கு உண்டாயிற்று. அந்த அன்பின் பெருக்கிலும் ஆதரவிலும் ஒட்டிக் கொண்டு ஆட்டுக் குட்டியும் கைக் குழந்தை போல் உமாவின் கைகளுக்குள்ளேயே தவழ முயன்றது.

மேஜர் ராமதுரை அதிவிசித்திரமான ஒரு காட்சியைக் கண்டவர் போல் பிரமை தட்டிப் போய் ஒரு கணம் செயலற்று நின்ருர். பிறகு அவர் சுட்டெரிக்கும் தம் விழிகளே உருட்டித் தம் முறுக்கு மீசையின் முனேகள் இரண்டும் துடிதுடிக்க உமாவைக் கொன்றுவிடுவது போல் உற்றுப் பார்த்துக் கொண்டே, ''ஏய்! ஆட்டுக் குட்டியைக் கீழே போட்டு விட்டு ஓடிப் போ!'' என்று பீரங்கி வெடிப்பது போல் கத்தினுர்.

உமா சிறிதுகூட அசையவில்லே. ஆட்டுக்குட்டியை இன்னும் ஆதரவாகத் தன் கைக்குள் அடக்கிக் கொண்டு கிழவரை நன்ருக நிமிர்ந்தே பார்த்தாள் அவள்.

''ஐயா, பெரியவரே! இதை அடித்துக் கொல்லாதீர்கள்! பாவம், இது வாயில்லா ஜீவன்!'' என்று உமா நெஞ்சு விம்மக் குரல் தழுதழுக்கக் கெஞ்சினுள்.

''ஓஹோ! வாயில்லா ஜீவனுக்காக வாதாட வாயுள்ள ஜீவன் வந்திருக்கிருயா? வாதாட வேண்டுமென்ருல், கோர்ட்டுக்குப் போ!'' என்று மேஜர் ராமதுரை சட்டப் பாயிண்டு பேசி முழக்கமிட்டார்.

''ஐயா! இதை ஏன் அடித்துக் கொல்லுகிறீர்கள்? இது உங்களுக்கு என்ன தீங்கு செய்தது?''

''அந்தக் 'கிராஸ்' கேள்வியெல்லாம் கேட்க நீ யார்? போலீஸ்காரியா? கிரிமினல் வக்கீலா?''

''ஐயா! ஜீவஹிம்சை செய்வதை யாராலும் சும்மா பார்த்துக் கொண்டிருக்க முடியாது!''

''இந்த ஆட்டுக்குச் சொந்தக்காரன் வந்தால் கூடச் சும்மா பார்த்துக் கொண்டுதான் நிற்பான்! இதுக்கு விலேயாக இரண்டு மடங்கு காசை வீசியெறிந்தால் அந்தப் பயலும் சேர்ந்து இதை அடித்து நொறுக்குவான்!''

''நீங்கள் விலே கொடுத்து வாங்கிளுலும் ஒரு ஜீவனேச் சவுக்கால் அடித்துச் சித்திரவதை செய்ய உங்களுக்கு உரிமை கிடையாது!'' என்று சொன்ன உமா கிழவரின் ரௌத்ராகாரமான முகத்தை உற்றுப் பார்த்து விட்டுக் கனிவான குரலில், ''பெரியவரே! கொஞ்சம் ஜீவகாருண்யத்தைப் பற்றிச் சிந்தித்துப் பாருங்கள்!'' என்ருள்.

''ஓஹோ! ஜீவகாருண்ய சங்கத்துக்கு ஏஜண்டாக வந்திருக்கிருயா? அப்படியாளுல் முதலில் இந்தச் சென்னேப் பட்டணத்தில் உள்ள கசாப்புக் கடைகள், மிலிட்டரி ஹோட்டல்களே யெல்லாம் மூடி விட வேண்டும் என்று சட்டசபையில் போய்ப் பிரசங்கம் செய்! இங்கே வீணுக நின்று கூச்சல் போடாதே!'' என்று கர்ஜித்த ராமதுரை தம் கையில் உள்ள சவுக்கை ஓங்கிப் பிடித்தபடி, ''முதலில் இந்தக் குட்டியைக் கீழே போட்டு விட்டுத் தள்ளி நில்! இல்லாவிடில் சவுக்கடி உன் மீதும் விழுந்து பிய்த்தெறிந்துவிடும்!'' என்று அதிபயங்கரமாக எச்சரித்தார்.

உமா திகில் அடைந்தாள். ஆளுலும் மிருக பலத்தைக் கண்டு பணிந்து விடவோ, தன்னிடம் சரணுகதி அடைந்திருக்கும் ஒரு ஜீவனேப் புறக்கணித்து அதைப் பரிதவிக்க விடவோ அவள் தயாராக இல்லே. தன் உயிரே போளுலும் அந்த ஆட்டுக்குட்டியைக் கீழே விட அவள் மனம் சம்மதிக்காது!

உமா அசையாமலே நின்ருள்.

அதைக் கண்டு மேஜரின் ஆத்திரம் இன்னும் அதிகரித்தது. போர்முனேயில் எதிரியை வீழ்த்திவிட வேண்டும் என்ற வெறியும் பொங்கி யெழுந்தது.

''நான் மூன்று எண்ணுவதற்குள் ஆட்டுக் குட்டியைக் கீழே போட்டுவிட்டு ஓடிவிட வேண்டும்! இல்லேயென்ருல் சவுக்கடி நிச்சயம் உன் மீதும் விழும்!'' என்று கடைசி எச்சரிக்கை விடுத்த ராமதுரை தம் கையில் உள்ள சவுக்கைச் சுழற்றி அருகிலுள்ள மரத்தின் மீது பளீர் என்று அடித்து அதன் கோர சக்தியைச் சுட்டிக் காட்டினுர்.

அப்போதும் உமா சிறிதும் அசையவில்லே. ஆட்டுக்குட்டியைப் பற்றியிருக்கும் பிடியைச் சற்றுக் கூடத் தளர்த்தவும் இல்லே. கைக் குழந்தையை எமனிடமிருந்து எந்த விதத்திலும் பிடிவாதமாகக் காக்கத் தயாராக நிற்கும் பாசம் நிறைந்த தாயைப் போலவே விளங்கினுள். (தொடரும்)


ASF/GM/K 3 K TAM
Kolynos
ஆஹா... கோலினூஸ்
புதியது - தூயது...
கோலினூஸின் சுவை:
வாயில் புத்துணர்ச்சியூட்டும் இனிய சுவை.
கோலினூஸின் நுரை:
துலக்குவதை சீக்கிரமாக்கும், பூரணமாகத் தூய்மைப்படுத்தும்.
கோலினூஸ் கொடுக்கும் அந்த
இனிய சுவாசத்தை நீங்கள் விரும்புவீர்கள்,
மற்றவர்களும் விரும்புவார்கள்.
அந்த ஐந்தாவது நண்பருக்கு ஒரு அருமை யான யோசனை. கோலினூஸ் உபயோகித்து மற்றவர்களைப்போல் புன்னகை புரியுங்கள். கோலினூஸ் கொண்டு காலையிலும் இரவிலும் பல்துலக்கி புத்துணர்ச்சியும் தூய்மையும் பெறுங்கள். மற்றவர்கள் மத்தியில் மகிழ்வோடும் நம்பிக்கையோடும் உலவ உதவுவது கோலினூஸ்.
களிப்பில் மலரும் புன்னகை...அது கோலினூஸ் தரும் புன்னகை

## அத்தியாயம் 56

ஓரிரு விநாடிகள் கல்லூரி முதல்வரின் முகத்தைக் கூர்ந்து கவனித்த பின் கலெக்டரே மேலும் தொடர்ந்து கூறலானார்:

''சில வட இந்தியப் பல்கலைக் கழகங்களிலும் கல்லூரிகளிலும் மாணவர்கள் வேலை நிறுத்தத்தால் வகுப்புக் கலவரங்கள், அடிபிடி சண்டைகள், அரசியல் தலைவர்களின் தலையீடு எல்லாம் கூட வரும். நம்முடைய தமிழ் நாட்டுக் கல்லூரிகளுக்கும் நீங்களே வலுவில் அப்படிக் கெட்ட பெயர் தேடாதீர்கள். இதுவரை நடந்தது போகட்டும். எல்லாவற்றையும் மன்னித்து விடலாம். இனிமேல் நாளையிலிருந்து ஒரு பொறுப்புள்ள 'பிரின்ஸிபாலாக இருந்து கல்லூரியை நடத்துங்கள்.






இப்படியெல்லாம் நடந்துவிட்டதே என மனத்தில் வைரம் வைத்துக் கொண்டு சமையல்காரர்களையோ, கல்லூரி 'நைட் வாட்ச்மேனையோ' சம்பந்தப்பட்ட ஆசிரியர்களையோ, மாணவர்களையோ பழி வாங்காதீர்கள். இத்தனை நாட்களாக வகுப்புக்கள் நடைபெறாததால் மாணவர்களுக்கும் படிப்புக் கெட்டுப் போயிருக்கிறது. கல்லூரியின் நல்ல பெயரையும், சம்பந்தப்பட்டவர்களின் கௌரவத்தையும் உத்தேசித்து எந்த மேல் நடவடிக்கையும் இல்லாமல் இந்த விஷயங்களை நாங்கள் இப்படியே விட்டு விடுகிறோம்'' என்று கலெக்டர் பரிவோடு கூறியபோது, பிரின்ஸிபால் குனிந்த தலை நிமிராமல் கேட்டுக்கொண்டிருந்தார். பின்பு மாணவர்களுடைய பெருங் கூட்டத்தினிடையேயும் ஓர் அரை மணி நேரத்துக்கு மேல் கலெக்டரும், டி. எஸ். பி. யும் சொற்பொழிவாற்றினார்கள். பொறுப்புள்ள மாணவர்கள்தாம் தேசத்தின் எதிர்கால நம்பிக்கை என்பதையும் அவர்கள் அடிக்கடி வேலைநிறுத்தம் செய்வதற்கோ ஒத்துழைக்காமல் போவதற்கோ கல்லூரி என்பது குழப்பங்களும் போராட்டங்களும் நிறைந்த தொழிற்சாலையல்ல என்பதையும் விளக்கி அறிவுரை கூறினார்கள் அவர்கள். எல்லாம் சுமுகமாக முடிந்து விட்டது. ஜமீன்தார் 'லோ' பிளட் பிரஷரில் படுத்தவர் படுத்தவர்தான். சாயங்காலம் கல்லூரி முதல்வர் நடந்தவற்றை எல்லாம் தெரிவிக்கச் சென்றிருந்தபோது கண்ணாயிரத்திடம்தான் எல்லாவற்றையும் தெரிவிக்க வேண்டியிருந்தது. ஜமீன்தாரின் உடல்நிலையை எண்ணி, அந்தச் செய்திகளை அவரிடம் அப்போது தெரிவிக்க வேண்டாமென்று டாக்டர் தடுத்துவிட்டார். கண்ணாயிரம் கல்லூரி முதல்வரை ஏதோ கோபித்துக்கொள்ளத் தொடங்கியபோது, ''காலேஜை எப்படி நடத்தறதுன்னு எனக்கு நீங்கள் சொல்லித் தெரியவேண்டாம்! தயவுசெய்து உங்கள் வாயை மூடிக் கொள்ளுங்கள்'' என்று முதல்வரிடமிருந்து மிகவும் கடுமையாகப் பதில் வந்தது. டிரைவர் முத்தையா பின்புறமாகத் தோட்டத்துப் பக்கம் போய்ப் பாரதியிடம் நடந்தவற்றைத் தெரிவித்துக் கொண்டிருந்தான். சத்தியமூர்த்தியின் உண்மை வென்று விட்டதென்ற செய்தி அவளைப் பூரிக்கச் செய்தது.

ஆனால் அதே மாலை வேளையில் மல்லிகைப் பந்தலின் டிராவலர்ஸ் பங்களா வாசலில் இன்னும் சற்று நேரத்தில் அங்கிருந்து மதுரைக்குப் புறப்படுவதாயிருந்த சத்தியமூர்த்தியின் முன்னாள் விரிவுரையாளராகிய இன்றைய கலெக்டர் அவனைக் கூப்பிட்டு மிகவும் அந்தரங்கமாக அவனுடைய எதிர்கால நலனுக்குகந்த அறிவுரை ஒன்றை அவனுக்குக் கூறிக் கொண்டிருந்தார். அதே கலெக்டரின் பழைய மாணவனான குமரப்பனும் அப்போது உடனிருந்தான். சத்தியமூர்த்தியை அருகில் வந்து தட்டிக் கொடுத்துவிட்டு ஊருக்குப் புறப்படுமுன் விடைபெற்றார் கலெக்டர். 'ஜீப்' தயாராக டிராவலர்ஸ் பங்களாவின் முகப்பில் நின்று கொண்டிருந்தது. ''மதுரைக்கு வந்தால் வீட்டுக்கு வா சத்தியம்! என்னுடைய யோசனையையும் மனத்தில் வைத்துக் கொள்! உன் எதிர் காலத்தில் மிகவும் நம்பிக்கை உண்டு எனக்கு. நடந்ததையெல்லாம் கெட்ட சொப்பனம் போல மறந்துவிடு! நான் யோசனை கூறிய விஷயமாக இன்னும் ஒரு வாரத்தில் நானே உனக்கு விவரமாக ஒரு கடிதம் எழுதுவேன். அதன் பிறகு உன் முடிவை நீ எனக்கு எழுதினால் போதும்'' என்று சத்தியமூர்த்தியிடம் கூறிவிட்டுக் குமரப்பனின் பக்கமாகத் திரும்பி, ''நீ விவரமாக எல்லாவற்றையும் உன் நண்பனுக்கு விளக்கிச் சொல் குமரப்பன்! நானும் ஊருக்குப் போய்க் கடிதம் எழுதுகிறேன்'' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டார் கலெக்டர். அந்தக் கலெக்டருக்குச் சத்தியமூர்த்தி இப்போது எவ்வளவோ நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருந்தான். விரிவுரையாளரா

யிருந்த காலத்திலேயே அவருடைய இலக்கியத் திறனையும், அறிவு நுணுக்கத்தையும் விரும்பி நேசித்தவன் அவன். அரசாங்கப் பிரதிநிதியாக ஒரு பொதுக் காரியத்தில் நியாயம் விசாரிக்க வந்திருந்தாலும் 'சத்தியமூர்த்தி' என்ற தன் பெயரைக் கேள்விப்பட்டதுமே, தன்னைப் பற்றிய விவரங்களை விசாரித்து அந்தப் பெயருக்குடையவன் தம்முடைய பழைய மாணவனாகத்தான் இருக்க வேண்டுமென்று அநுமானமும் செய்து கொண்டு உடனே தன்னைக் கூப்பிட்டனுப்பி மனம் விட்டுப் பேசிய அந்தக் கலெக்டரின் பெருந்தன்மையை எண்ணி எண்ணி வியந்து கொண்டிருந்தான் அவன். அதையெல்லாம் விடப் பெரிதாக அவன் மனத்தைத் தொட்ட பெருந்தன்மை, 'ஏதோ வந்தோம் — விசாரித்தோம் — போனோம்' என்று முறையைக் கழித்து விட்டுப் போகாமல், மிகவும் உரிமை பாராட்டி, அவனுடைய எதிர் கால நலனுக்குரிய சிறந்த யோசனை ஒன்றையும் வற்புறுத்திக் கூறி

**பொன் விலங்கு**

> ஆணின் மனத்தில் உணர்வுகள் தோன்றலாம். ஆனால் பெண்ணின் மனத்திலோ உணர்வுகள் மிக மெல்லப் பூக்கின்றன. உள்ளேயே மணந்து மணந்து மகிழ்ச்சியூட்டும் உணர்வுகளைப் பெண் தன்னுடைய பலமாக நியமக்கிக் கொண்டுவிடுகிறாள்.

விட்டுப் போயிருந்தார் அந்தக் கலெக்டர். நண்பன் குமரப்பனுக்கும் அந்த யோசனை மிகவும் பிடித்திருந்தது. அன்றிரவு முழுவதும் சத்தியமூர்த்தி அதைப் பற்றித் தீவிரமாகச் சிந்திக்கத் தொடங்கியிருந்தான்.

அவன் தன் எதிர்காலத்தைப் பொருளாக வைத்துச் சிந்திக்கத் தொடங்கியிருந்த இதே இரவில் அவனைப் பொருளாக வைத்துத் தாங்கள் சிந்திக்கத் தொடங்கியிருந்த சிந்தனைக்கு முடிவே கிடைக்காமல் ஒரே வீட்டின் ஒரே அறையில் இரண்டு பெண் மனங்களும் தவித்துக் கொண்டிருந்தன. அன்றிரவு படுத்துக் கொள்வதற்கு முன் மோகினியும், பாரதியும் ஹாலில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது ஹாலில் வேறு யாரும் இல்லை. அவர்கள் இரண்டு பேரும் மட்டுமே தனியாக இருந்தார்கள். கண்ணாயிரமும், கணக்குப்பிள்ளைக் கிழவரும் முன்புறம் ஜமீன்தார் படுத்திருந்த அறையருகில் அவருக்கு உதவியாகக் காத்திருந்ததனால் பங்களாவின் உள் கூடத்தில் மோகினியும், பாரதியும் தனியாக அமர்ந்து பேசிக்கொள்ள வசதியாக இருந்தது. பாரதியின் மனத்திலோ அப்போது கல்லூரி வேலை நிறுத்தத்தைப் பற்றிய விசாரணையில் சத்தியமூர்த்திக்கு நியாயம் கிடைத்து அவர் வென்று விட்டார் என்ற பெருமிதமும் மகிழ்ச்சியுமே நிரம்பியிருந்தன. அந்த மகிழ்ச்சிப் பெருமிதத்தை இன்னும் யாரிடமாவது பகிர்ந்து கொள்ள வேண்டும் போலத் தனக்குத் தானே உணர்ந்தவளாக மோகினியிடம் பேச்சுக் கொடுத்தாள் பாரதி:

''அக்கா! உங்களுக்குத் தெரியுமா செய்தி? நான் சொன்னேனே;—அது தான்..... மாணவர்களுக்கு எல்லாம் விருப்பமான ஓர் இளம் விரிவுரையாளரை வெளியேற்றி விடுவதற்கு ஜமீன்தாரும், எங்கள் பிரின்ஸிபாலும் சூழ்ச்சி செய்கிறார்கள் என்றேனே — அது பலிக்க வில்லை. அந்த நல்ல விரிவுரையாளருக்கு நியாயம் கிடைத்து விட்டது. இவர்கள் அவரை ஒன்றும் அசைக்க முடியவில்லை......''

என்று தொடங்கிச் சொல்லிக் கொண்டு வந்த பாரதியைக் குறுக்கிட்டுத் தன் ஆவலை அடக்க முடியாமல் மோகினி ஒரு கேள்வி கேட்டாள் :

''அது சரி, பாரதி! அந்த விரிவுரையாளரின் பெயர் என்னவென்று எனக்குச் சொல்லவில்லையே நீ?'' — இப்படி வினவிய போது வேகமாக அடித்துக் கொள்ளும் நெஞ்சுடன் அவள் பதில் சொல்லப்போகும் பெயருக்காகக் காத்துத் தவிக்கத் தொடங்கியிருந்தாள், மோகினி.

''அவர்கூட உங்கள் ஊர்க்காரர் தான் அக்கா! அவர் பெயர் சத்தியமூர்த்தி என்பார்கள். இன்னொரு விஷயம் கூட எனக்கே நேற்றுத்தான் தெரிந்தது. உங்களை மதுரையிலிருந்து இங்கே அழைத்துக் கொண்டு வந்தாரே; ஒரு கணக்குப் பிள்ளைக் கிழவர் — அவர்தான் சத்தியமூர்த்தியுடைய தந்தையாம். அவரிடம் அந்தக் கிழவரையே அனுப்பியும் மிரட்டிப் பார்த்திருக்கிறார்கள் ..... பலிக்கவில்லை'' என்று சொல்லிக் கொண்டே வந்த பாரதி மோகினியின் முக பாவத்தில் தெரிந்த மாறுதலையும், அவளுடைய கண்கள் கலங்குவதையும் பார்த்துப் பேச்சை அவ்வளவில் நிறுத்தினாள்.

''ஏனக்கா இப்படி? உங்களுக்குச் சத்தியமூர்த்தியைத் தெரியுமா?.....''

பதில் சொல்லாமல் கண்ணீர் உகுத்துக் கொண்டிருந்தாள் மோகினி. பாரதி

இந்த ஒரு **வண்ணாத்திப் பூச்சி** தான்

ROHIT MILLS LTD., AHMEDABAD, (INDIA)

ஷர்ட்டிங்குகள் மேல்
அச்சாகிறது.

# ரோஹித்

## மில்ஸ் லிமிடெட்

**தயாரிக்கும் ஷர்ட்டிங்குகள்**

ரோஹித் மில்ஸ் லிமிடெட்
கோக்ரா மெஹ்மெதாபாத், அகமதாபாத்-8

ரோஹித் குருப் (R) நிறுவனங்களில் ஒன்று

RPY-3

மறுபடியும் அருகில் வந்து, ''அவரை ஏற்கனவே உங்களுக்குத் தெரியுமா அக்கா?'' என்று வினவிய போது, 'தெரியும்' என்பதற்கு அடையாளமாகத் தலையை மட்டும் அசைத்தாள் மோகினி. சிறிது நேரம் கழித்து, ''அப்புறம் என்ன நடந்தது பாரதி? மாணவர்கள் வேலை நிறுத்தம் எப்படி நின்றது? அவருக்கு நியாயம் எவ்வாறு கிடைத்தது?'' என்று மோகினியே அழுகையை நிறுத்திவிட்டுத் தன்னைத் தூண்டிக் கேட்ட போது பாரதி ஆச்சரியமடைந்தாள். எனினும் தன் ஆச்சரியத்தை வெளிக்காட்டிக் கொள்ளாமல் நடந்தவை எல்லாவற்றையும் மோகினிக்குக் கூறினாள் அவள். மோகினியோ மேலும் மேலும் வேதனை கலந்த ஆர்வத்தோடு சத்திய மூர்த்தியைப் பற்றிப் பாரதியிடம் ஒவ்வொன்றாக வினவிய வண்ணம் இருந்தாள். ''இந்த ஊரில் அவர் எங்கே தங்கியிருக்கிறார் பாரதி? அவர்தான் ஹாஸ்டல் உதவி வார்டன் என்று கூறினாயே; அதனால் ஒரு வேளை ஹாஸ்டலிலேயே தங்கியிருக்கிறாரோ?'' என்று மோகினி கேட்ட போது சத்திய மூர்த்தியைப் பற்றி அவள் காட்டிய அக்கறையும் சிரத்தையும் பரபரப்பும் பாரதியின் மனத்தில் வியப்பையும் சந்தேகத்தையும் வளர்த்தன. 'நேற்றோ முந்தாநாளோ அந்தக் கணக்குப் பிள்ளைக் கிழவரைப் பற்றி, 'இந்த முதியவர் யாரென்று உங்களுக்குத் தெரியுமா அக்கா?' என்று இவளிடம் நான் விசாரித்த போது, 'எனக்கு ஒன்றுமே தெரியாதம்மா' என்று அப்பாவிபோல் பதில் கூறினாளே? இப்போது அந்த முதியவரின் மகனை சத்தியமூர்த்தியைப் பற்றி மட்டும் இப்படித் தூண்டித் தூண்டி விசாரிக்கிறாளே ? சத்தியமூர்த்தியைப் பற்றி மட்டும் இவளுக்கு என்ன இத்தனை அக்கறை?' என்று மனத்துக்குள் எண்ணினாள் பாரதி. 'சத்தியமூர்த்தியை மட்டும் உங்களுக்கு எப்படித் தெரியும் அக்கா?' என்று மோகினியைக் கேட்டு விடக் கூடப் பாரதியின் நாவு துடிதுடித்துக் கொண்டிருந்தது. ஆனால் மோகினியின் கலைத் திறனாலும் அழகுப் பெருமையினாலும் அவள் மேல் தன்னையறியாமலே பாரதிக்கு உண்டாகியிருந்த ஒரு விதமான பயபக்தி அப்படிக் கேட்கவும் துணிய விடாமல் அவளைத் தடுத்துவிட்டது. 'அவரைப் பற்றி இவளுக்கு ஏன் இவ்வளவு அக்கறை?' என்று மனம் தூண்டித் தூண்டிக் கேட்க மனத்தின் அந்தக் கேள்வியை உள்ளேயே இரகசியக் குரலாகப் புதைத்து விட்டு வாய் வார்த்தைகளால் மோகினி கேட்பதற்கெல்லாம் இயந்திரம் போல் பதில் சொல்லிக் கொண்டிருந்தாள் பாரதி.



''நீ உன் குடும்பத்துடன் வந்து என்னுடன் ஒரு மாதம் தங்கவேண்டும் என்று ஆசைப்பட்டாயோ, இல்லையோ! உனக்கு எதற்காகப் பாவம் வீண் அலைச்சல் என்று நானே குடும்பத்துடன் உன்னிடம் வந்து சேர்ந்து விட்டேன்!''

பேச்சு முடிந்து படுத்துக் கொள்ளச் சென்ற பின்போ இருவருமே உறக்கம் வராமல் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தார்கள். பக்கத்துப் பலகணிகளின் வழியே தோட்டத்தில் அவசர அவசரமாக முன்னிரவிலேயே மலர்ந்து விட்டிருந்த பவழமல்லிகைப் பூக்களின் நறுமணம் அறைக்குள் வந்து கமழ்ந்து கொண்டிருந்தது. பலகணிக்கு அப்பால் மலைப் பிரதேசத்தின் மங்கிய வானத்தில் எங்கோ ஒரு மூலையில் கீறி விட்டாற் போலப் பிறை நிலா நகர்ந்து கொண்டிருந்தது. மௌனமாக மெல்ல நகரும் அந்தப் பிறை நிலாவும், மந்த மாருதம் போன்ற மெல்லிய காற்றின் சிலுசிலுப்போடு கலந்து அறைக்குள் வந்து நிறையும் பவழமல்லிகைப் பூக்களின் மணமும் சேர்ந்து மோகினியின் இதயத்தில் தாபத்தைப் பெருக்கின. மாலையில் பட்டுப் புடைவைக் கடையின் வாசலில் சத்தியமூர்த்தியைச் சந்தித்த போதே அவள் தவித்த தவிப்பு இப்போது பன்மடங்காகப் பெருகியிருந்தது. வாய் விட்டுக் கேட்கவும் முடியாமல் தானாகத் தெரிந்து கொள்ளவும் வழி இல்லாமல் தவித்த உண்மை தெரிந்து விட்டதென்ற களிப்பும்—அந்தக் களிப்பின் மறுபுறமான வேதனைகளும் நிறைந்த மன நிலையோடு படுக்கை

**உயர்தரமான காபிக்கொட்டைகளிலிருந்து**
**தயாரிக்கப்பட்டது**
**...சாஸ்திரீய முறையில் வறுத்து,**
**பொடியாக்கப்பட்டது**
**...சுத்தத்திற்கு உத்தரவாதம்!**




**தரத்திற்கென்று தேர்ந்தெடுக்கப்பட்டது:-** நீங்கள் மிகச் சிறந்த காபி வாங்கவென்று ப்ருக் பாண்ட் நிபுணர்கள் உத்தமமான தென்னிந்திய காபிப் பயிரைத் தேர்ந்தெடுக்கின்றனர்!

**வளமான நறுமணம் பெற வறுத்தல்:-** உங்களுக்கு இனிய சுவையும் மணமும் தரவென்று நவீன விஞ்ஞான முறைகளில் வறுக்கப்படுகின்றன!

**மிக சுத்தமாயிருக்க காற்று புகாத டப்பாக்களில் ஸீலிடப்படுகிறது:-** கைபடாமலும் காற்று புகாமலும் சுகாதார முறையில், கேடுறாத டப்பாக்களில், நவம், புத்தம் புதுமை, நறுமணத்துடனும் அடைக்கப்பெற்று ஸீலிடப்பட்டு, ப்ருக் பாண்ட் காபி உங்களிடம் வருகிறது.



ப்ருக் பாண்ட்
சுத்தமான காபி
அல்லது சிகரி
கலந்த ப்ருக்
பாண்ட் ப்ரெஞ்சு
காபி குடித்துப்
பாருங்கள்

JWTBB 1293 TM

ில் உறக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்தாள் மோகினி. சத்தியமூர்த்தியின் பாதங்களை நினைத்தபோது 'ஆரார் ஆசைப்படார் நின் பாதத்துக்கு' என்ற த்துத் தாண்டவர் பதத்தைத் தான் உணர்ச்சி மல்க ஆடிய வேளைகளும், மேடைகளும் ஞாபகம் வந்தன அவளுக்கு. 'மாலையில் பட்டுப் புடவைக் கடை வாசலில் என்னை ஜமீன்தாரோடும் ண்ணுயிரத்தோடும் சேர்த்துப் பார்த்தவர் என்ன நினைத்து எப்படி எண்ணி மனம் குமுறிக் கொண்டு போகிருரோ?" என்ற ஞாபகம் இப்போதும் அவளைக் கலக்கியது. 'நான் மதுரையிலிருந்து ஜமீன்தார் கூப்பிடுகிருரே என்பதற்குப் பயந்து இங்கே வந்திருப்பதே அவருக்குப் பிடிக்காது! 'கோழைகள் காதலிக்கக் கூடத் தகுதியற்றவர்கள்' என்பாரே அவர்! நானும்தான் ஏன் இப்படிச் செய்தேன்? எதற்காக இங்கே புறப்பட்டு வந்தேன்? ஜமீன்தார் கூப்பிட்டால் நான் ஏன் பயப்பட வேண்டும்? 'நான் வர மாட்டேன்' என்று பிடிவாதமாக மறுத்திருக்கலாமே! பாவி அப்படிச் செய்யாமற் போனேனே!' என்று எண்ணிக் கழிவிரக்கத்தில் ஆழ்ந்தாள் அவள். பாரதி சொல்வது உண்மையாயிருந்தால் தன்னை மதுரையிலிருந்து மல்லிகைப் பந்தல் வரை காரில் அழைத்து வந்தவர் வேறு யாரும் அந்நியர் இல்லை; தன் இதயம் கவர்ந்தவரின் தந்தைதான் என்ற சிறிய மகிழ்ச்சியும் அந்தக் கழிவிரக்கத்தில் இருந்தது. தந்தைக்கும் மகனுக்கும் மலைக்கும் மடுவுக்குமுள்ள அத்தனை வேறுபாடு இருப்பதை அவளும் நினைத்துப் புரிந்து கொண்டாள். 'என்ன ஆச்சரியம்? இந்தக் கிழவர்தான் சத்தியமூர்த்தி அவர்களின் தந்தை என்பதை இதுவரை நான் தெரிந்து கொள்ள முடியாமல் போய் விட்டதே!' என்று நினைத்து அந்த நினைப்பின் கவடு நீங்குவதற்குள்ளாகவே 'என்னுடைய மாமனார்' என மெல்லத் தனக்குத்தானே கள்ளத்தனமாகச் சொல்லிப் பார்த்துச் சிரித்துக் கொண்டாள் அந்தப் பேதை. கல்லூரியில் அவருக்கு ஏற்பட்ட இடையூறுகள் எல்லாம் தவிர்ந்து நியாயம் பிறந்து விட்டது என்ற செய்தியைப் பாரதி கூறக் கேட்டபோது அவள் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. 'பாரதியும் அதைப் பெரு மகிழ்ச்சியோடும் மனநிறைவோடும் என்னிடம் கூறினளே! அவளுக்குத்தான் தன் விரிவுரையாளரிடம் எத்தனை பெருமதிப்பு? இந்தப் பாரதியைப் போல்தானே மல்லிகைப் பந்தல் கல்லூரியிலே படிக்கிற ஒவ்வொரு மாணவனும், மாணவியும், என் அன்பரின் மேல் பெருமதிப்பு வைத்திருப்பார்கள்?' என்று எண்ணிப் பெருமைப்பட்டாள் மோகினி. பாரதி சத்தியமூர்த்தியைப் பற்றிய பேச்சை மிகவும் ஆர்வத்தோடு பேசியதற்கும் அந்த விரிவுரையாளருக்கு நியாயம் கிடைத்த செய்தியை மகிழ்ச்சிப் பெருக்கோடு தெரிவித்ததற்கும், 'அவர் அவளுடைய மதிப்புக்கும் அன்புக்கும் உரிய விரிவுரையாளர்' என்பதைத் தவிர வேறு காரணமே இருக்க முடியாதென்றுதான் மோகினி நினைத்தாள். ஆனல் அதே சமயத்தில் பக்கத்தில் உள்ள மற்ருெரு படுக்கையில் புரண்டு கொண்டிருந்த பாரதியோ 'மோகினிக்குச் சத்தியமூர்த்தியிடம் ஏன் இவ்வளவு அக்கறை?' என்ற புரியாப் புதிருக்கு விடை காண முடியாமல் மனம் குமைம்பிக் கொண்டிருந்தாள். ஓர் ஆணின் மனத்தில் உணர்வுகள் தோன்றலாம். ஆனல் ஒரு பெண்ணின் மனத்திலோ உணர்வுகள் மிக மெல்லப் பூக்கின்றன. உள்ளேயே மணந்து மணந்து மகிழ்ச்சியூட்டும் உணர்வுகளைப் பெண் தன்னுடைய பலமான நிதியாக்கிக் கொண்டு விடுகிருள். மறு நாள் பொழுதுபுலர்ந்ததும் மோகினி அப்படி ஆகி விட்டாள். மனத்தின் முழுமையான மகிழ்ச்சியை அரைகுறையாக வெளிப்படுத்துவதாக முறிந்து முறிந்து வெளிப்படும் தற்செயலான சங்கேதத்தைப் போல அவளுடைய இதழ்கள் ஏதேதோ பாடல் வரிகளைப் புதிது புதிதாக இசைத்தன. பாரதி அன்றிலிருந்து கல்லூரிக்குப் போய்வரத் தொடங்கலாம் என்று புறப்பட ஆயத்தம் செய்து கொண்டிருந்தாள். அப்போது நீராடிய ஈரக்கூந்தலைக் கோதியவாறே மோகினி அவளிடம் தயங்கித் தயங்கி வந்து நின்ருள்.

''என்ன அக்கா! உங்களுக்கு நான் ஏதாவது செய்ய வேண்டுமா? இன்றிலிருந்து காலேஜுக்குப் போகலாம் என்று நினைக்கிறேன்.....'' என்ருள் பாரதி. மோகினி முதலில் சிறிது நாணித் தயங்கி விட்டு அப்புறம் கூறலாளுள்:

''உன்னல் ஒரு காரியம் ஆக வேண்டும் பாரதி! சத்தியமாக நீ அதைச் செய்வதாக ஒப்புக் கொண்டால்தான் எனக்கு உன் மேல் நம்பிக்கை உண்டாகும்......''

''அதென்ன அக்கா, அத்தனை பெரிய காரியம்? உங்களுக்குக் காரியமும் ஆக வேண்டும்! அதே சமயத்தில் சத்தியமும் வேண்டுமாக்கும்? சரி!.... உங்கள் விருப்பப்படியே சத்தியமாக நீங்கள் சொல்வதைச் செய்கிறேன்.... சொல்



**மனைவி:** ஸ்டவ் மேலேருந்து சாதத்தை இறக்கிவச்சுட்டு வர்றதுக்கு உங்களுக்கு எவ்வளவு நேரம்...?

னுங்கள்...'' என்று சிரித்துக்கொண்டே இணங்கினாள் பாரதி.

''நான் 'ஒன்று' கொடுக்கிறேன். அதை நீ தயவுசெய்து எனக்காக 'அவரிடம்' கொண்டு போய்க் கொடுத்து விட முடியுமா பாரதி?''

'' 'அவரிட'மென்றால் எவரிடம், அக்கா?''

''அவர்தான்! நேற்றுப் பேசிக் கொண்டிருந்தோமே; உங்கள் தமிழ் விரிவுரையாளர்......''

''யார்? சத்தியமூர்த்தி சாரிடமா?''

''ஆமாம்! அவரிடம்தான்....''

இதைக் கூறும் போது மோகினியின் முகத்திலிருந்த நாணத்தையும், கனிவையும் கண்டு பாரதி திகைத்துப் போனாள். தன் உணர்ச்சிகளை எப்படி மறைத்துக் கொள்வதென்றே அவளுக்குப் புரிய வில்லை. மோகினியின் முகத்தை நேருக்கு நேர் பார்க்கவே தயக்கமாயிருந்தது பாரதிக்கு. சூறையாடப்பட்டது போன்ற மன நிலையில் எதிரே நிற்பவளுக்குப் பதில் ஒன்றும் சொல்லத் தோன்றாமல் கீழே குனிந்த தலையுடன் கால் கட்டை விரலால் தரையைத் தேய்த்துக் கொண்டு நின்றாள் பாரதி. 'கோ'வென்று கதறி அழுது விடாமல் மிகவும் சிரமப்பட்டுத் தன்னை அடக்கிக் கொண்டாள் அவள். அவளுடைய நிலையையும் அவள் ஒன்றும் பதில் சொல்லாமல் தலை குனிந்து விட்டதையும் பார்த்துத் தான் கூறிய காரியத்தை 'அவளால் செய்ய முடியாதோ என்னவோ' என்று தானாகவே அநுமானித்துக் கொண்ட மோகினி, ''ஏன்? என்ன? உன்னால் முடியாதென்றால்... வேண்டாம் பாரதி!'' என்று பதற்றத்தோடு கூறினாள். சில விநாடிகள் வரை மோகினியை நிமிர்ந்து பார்க்கத் துணிவின்றித் தலைகுனிந்து நின்றிருந்த பாரதி பின்பு நிதானமாகவும் நிச்சலனமான முகபாவத்துடனும் நிமிர்ந்து பார்த்தாள். ''அதெல்லாம் ஒன்றும் இல்லை. என்னால் முடியும். நிச்சயமாக முடியும். ஆனால்.....'' என்று வார்த்தையை மெல்ல இழுத்து நிறுத்தித் தயங்கினாள்.

''ஆனால் ..... என்ன?.....''

''கல்லூரியில் வைத்து அவரை நான் சந்தித்துப் பேச முடியுமென்று தோன்ற வில்லை.... அக்கா! 'லேக் அவென்யூ'விலுள்ள அவருடைய அறையில் போய் அவர் கல்லூரிக்குப் புறப்படுவதற்கு முன்பே வேண்டுமானால் அவரைப் பார்த்துவிட முடியும்....''

''எங்கே பார்த்தாலும் பரவாயில்லை. உன்னை என் கூடப் பிறந்த தங்கையாகப் பாவித்துக் கொண்டு நம்பி இதைக் கொடுத்தனுப்புகிறேன் பாரதி!'' என்று கூறிக் கொண்டே மோகினி கொடுத்த கடித உறையைக் கை நீட்டி வாங்கிய போது பாரதியின் கை நடுங்கியது. மனமோ கைகளைவிட அதிகமாக உள்ளே நடுங்கிக் கொண்டிருந்தது. அதைத் தானே தன் கைகளால் நேரில் கொண்டு போய்ச் சத்தியமூர்த்தியிடம் கொடுக்கப் போகிற காட்சியைக் கற்பனை செய்த போது தலை சுற்றிக் கொண்டு கீழே தள்ளி விடுவது போல் உலகமே சுழல்வதாகத் தோன்றியது அவளுக்கு. தன் உணர்ச்சிகள் மோகினிக்கு முன்பாகவே குமுறி வெளிப்பட்டு விடாமல் அவள் மிகவும் சிரமப்பட்டுத் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டியதாயிற்று.

''மோகினி கொடுத்தனுப்பினாள் என்று சொல்லி அவரிடம் கொடுத்து விட்டு வா பாரதி! நீ கல்லூரி விட்டு வீடு திரும்பியபின் சாயங்காலம் உனக்கு நானே எல்லாம் விவரமாகச் சொல்கிறேனம்மா!'' என்று எதிரே நிற்பவளின் மனக் குமுறல் புரியாமல் நாணமும் சிரிப்பும் பொங்கிடப் பேதையாக ஏதோ சொல்லத் தொடங்கினாள் மோகினி. அதைக் கேட்ட பாரதியோ செயற்கையாக ஏற்படுத்திக் கொண்ட முக மலர்ச்சியோடு ஏதோ ஒப்புக்குச் சிரிக்க முயன்றாள், பாவம்! **(தொடரும்)**

# காந்திஜி கதைகள்

**வியார்ஜி**

சிக்கனத்தைக் கடைப்பிடிக்க விரும்பிய காந்திஜி தென்னுப்பிரிக்காவில் இருந்தபோது தாமே தமது உடைகளைச் சலவை செய்யக் கற்றுக் கொண்டார். அதற்கான புத்தகம் ஒன்றை வாங்கிப் படித்து, மனைவி கஸ்தூரி பாய்க்கும் சொல்லிக் கொடுத்தார். அவர் முதன் முதலில் தாமாகவே சலவை செய்து போட்டுக் கொண்ட கழுத்துப் பட்டை (காலர்)க்குத் தேவைக்கு அதிகமாகக் கஞ்சி போட்டுவிட்டுத் திண்டாடினுர். இஸ்திரிப் பெட்டியின் சூடும் போதாது! துணி எங்கே பொசுங்கி விடுமோ என்ற பயத்தில் அவர் அதை அழுத்தித் தேய்க்கவும் இல்லை. அதையே போட்டுக் கொண்டு கோர்ட்டுக்குப் போனுர். விரைப்பாக இருந்த காலரிலிருந்து அதிகப்படியான கஞ்சி உதிர்ந்து கொண்டே இருந்தது. மற்ற பாரிஸ்டர்களின் பரிகாசத்துக்கு ஆளான காந்திஜி, "இது எனது முதல் பரிசோதனை. அதனுல்



தான் இப்படிக் கஞ்சி உதிருகிறது. அது எனக்கு எந்த விதத் தொல்லையும் கொடுக்கவில்லை. அதோடு நீங்கள் இவ்வளவு சிரித்து இன்புறுவதற்கு இது காரணமாகவும் இருக்கிறது" என்று பதில் கூறிச் சமாளித்தார்.

கோகலே தென்னுப்பிரிக்காவுக்கு வந்தபோது ஜோகன்னஸ்பர்க் இந்தியர்கள் அவருக்கு ஒரு விருந்துபசாரம் நடத்திஞர்கள். விசேஷ சமயங்களில் அணிவதற்கென்று கோகலே ஓர் அங்க வஸ்திரம் வைத்திருந்தார். மகாதேவ கோவிந்த ரானடே அவருக்குத் தந்திருந்த அன்பளிப்பு அது. விருந்திற்குப் போவதற்கு முன்பு கசங்கியிருந்த அதை இஸ்திரி போட லாண்டிரிக்கு அனுப்ப நேரமில்லை. தாம் போட்டுத் தருவதாக முன் வந்த காந்திஜியிடம் கோகலே, "வக்கீல் தொழில் என்றல் உம்முடைய திறமையில் நான் நம்பிக்கை வைக்க முடியும். ஆனுல் இது சலவைத் தொழில் ஆயிற்றே!" என்று கூறி அந்த அன்பளிப்பின் வரலாற்றையும் விவரித்தார். ஆனுல் காந்திஜி வற்புறுத்தி அதை வாங்கிப் 'பெட்டி' போட்டுக் கொடுத்த பிறகு, 'சபாஷ்!' என்று பாராட்டினுர் கோகலே. 'அதற்குப் பிறகு அவ்வேலைத் திறமைக்கு எனக்கு நற்சாட்சிப் பத்திரம் அளிக்க உலகமே மறுத்து விட்டாலும் எனக்குக் கவலை இல்லை' என்று எழுதுகிருர் பாபுஜி.

⁂ ⁂ ⁂

★ தென்னுப்பிரிக்காவில் பிரிட்டோரியாவில் ஆங்கிலேய முடி வெட்டும் கலைஞர் ஒருவர் கறுப்பரான காந்திஜிக்கு முடிவெட்ட மறுத்துவிட்டார். அவமானத்துக்குள்ளான காந்திஜி உடனே மயிர்க் கத்தரி ஒன்று வாங்கிஞர். கண்ணுடி முன்பு நின்றுகொண்டு தம் தலை மயிரைத் தாமே கத்தரித்துக் கொண்டார். அவருடைய தலையின் அலங்கோலத்தைப் பார்த்துக் கோர்ட்டில் இருந்த நண்பர்கள் "உமது தலை



மயிருக்கு என்ன ஆபத்து வந்தது காந்தி? எலிகள் ஏதாவது வேலை செய்து விட்டனவா?" என்று கேலி செய்தனர்.

⁂ ⁂ ⁂

★ காந்திஜி தென்னுப்பிரிக்காவில் நடத்திய சத்தியாக்கிரகத்தில் பங்கு கொண்டு உயிர் நீத்தவர்கள் வள்ளியம்மை, நாகப்பன் என்ற தமிழர்கள். வள்ளியம்மையைப் பற்றிக் குறிப்பிடும்போது, "சத்தியாக்கிரக சரித்திரத்தில் வள்ளியம்மையின் பெயர் என்றும் அழியாது. அந்தப் பெண்ணுக்கு நன்றி செலுத்தும் வகையில் நான் அவர்களுடைய மொழியை நன்கு கற்க வேண்டும் என்று நினைத்திருந்தேன்" என்று கூறியிருக்கிருராம். 1914ல் காந்திஜி சென்னைக்கு வந்தபோது மகாகனம் சீனிவாச சாஸ்திரியார் அவரைத் தஞ்சாவூர் ஜில்லாவில் உள்ள தரங்கம்பாடிக்கு அழைத்துச் சென்று வள்ளியம்மை, நாகப்பன் குடும்பத்தினருக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

⁂ ⁂ ⁂

★ தென்னுப்பிரிக்காவில் காந்திஜியைச் சிறையில் அடைத்த ஜெனரல் ஸ்மட்ஸுக்குச் சிறையில் இருந்து வெளிவரும்போது தாம் சிறையில் இருக்கும்போது தைத்த ஒரு ஜோடி அழகான செருப்புக்களைப் பரிசளித்தார் காந்திஜி. 1939ல் மகாத்மாவின் எழுபதாவது பிறந்த நாள் விழாவின்போது நட்பின் அடையாளமாக அவற்றை அவருக்குத் திருப்பி அனுப்பிய ஸ்மட்ஸ், "இவற்றை நான் நெடுங்காலம் உபயோகித்து வந்தேன். அந்த மகானுடைய செருப்புக்களை அணிவதற்கு நான் ஒரு சிறிதும் அருகதையற்றவன்



என்றே எண்ணி வந்திருக்கிறேன்" என்று குறிப்பிட்டார். மகாத்மாவின் எழுபது ஆண்டு நிறைவு விழா மலரில் ஸ்மட்ஸ் எழுதிய கட்டுரையில் காந்திஜியை வெகுவாகப் பாராட்டி எழுதியவர், "விதியின் சதி, நான் அவருக்கு எதிர்ப்பாக இருக்கும்படி நேர்ந்து விட்டது. ஆனுல் எப்பொழுதும் எனக்கு அவரிடம் நிரம்ப மரியாதை உண்டு" என்று குறிப்பிடுகிருர்.

⁂ ⁂ ⁂

★ 1908ம் வருஷம். காந்திஜி தென்னுப்பிரிக்க இந்தியர் சார்பாக பிரிட்டிஷ் பார்லிமெண்டிடம் பேச வந்திருந்தார். லண்ட

ரில் அப்பொழுது வீர சாவர்க்கர், மகரிஷி '. வே.சு. அய்யர் ஆகியோர் இந்திய விடுலைக்காகப் பயங்கர இயக்க முயற்சிகளை மற்கொள்ளுவது பற்றிய யோசனையில் இருந்னர். அவர்களுடன் அப்போது டி. எஸ். ஸ். ராஜனும் இருந்தார்.

வ. வே. சு. அய்யரும், சாவர்க்கரும் ாந்திஜியோடு கருத்து வேற்றுமை கொண்டிருந்தாலும் அவரிடம் மிகவும் மரியாதை வைத்திருந்தார்கள். அப்போது தீபாவளி சமயம். காந்திஜியை இந்தியா விடுதியில் தீபாவளி விருந்துக்கழைத்து லண்டன் வாழ் இந்தியர்களுக்குச் சில உரைகள் வழங்க வண்டு மென்று கோரினர். காந்திஜி ிருந்து சைவ உணவாக இருக்க வேண்டும் ன்றும், வெளி ஹோட்டலில் எங்கும் வண்டாம் என்றும் கூறிவிடவே, டி. எஸ். ஸ். ராஜன், இன்னும் சில இந்தியர்கள் ல்லோரும் தாங்களாகவே மும்முரமாகச் மையலில் ஈடுபட்டனர்.



அவர்களில் ஒருவர் மெலிந்த தோற்றடையவரான நடுத்தர மனிதர். அவரை .. எஸ். எஸ். ராஜனும் மற்றவர்களும் ண்ணீர் எடுப்பது, தொட்டி கழுவுவது, பான்ற வேலைகளில் ஈடுபடுத்தினர்கள்.

வெளியே சென்றுவிட்டு வந்த வ. வே. சு. ய்யர் அந்தப் புதியவர் வேலை செய்து கொண்டிருப்பதைப் பார்த்து, ''என்ன து அக்கிரமம்! அவரை யார் வேலை வாங்கியது? அவரல்லவா இன்று நம்முடைய ிருந்தாளியாக வந்திருக்கும் காந்தி'' என்று ிரைந்தார். எல்லோரும் பிரமித்து நின்று ிட்டனர். மன்னிப்புக் கேட்டுக் கொண்ட ய்யரிடமும் மற்றவர்களிடமும் ''தப்பு ன் பேரில்தானே உள்ளது? நானேதானே வேலையில் இறங்கினேன். அவர்கள் என்னைப் ார்த்ததுமில்லை. தவிர லண்டனில் இம்ாதிரி ஒரு விருந்து தயார் செய்வதென்றால் அதில் எவ்வளவு கஷ்டம் உள்ளது! அதற்காகத் நான் நானும் உதவி செய்தேன்'' என்று ிரித்துக் கொண்டே கூறினர் காந்திஜி.

ஃ ஃ ஃ

★ 1919ம் வருடம். காந்திஜி சென்னையில் ராஜாஜியின் விருந்தினராக இருந்த சமயம். ரௌலட் சட்டத்தை எதிர்த்துச் சத்தியாக்கிரக இயக்கம் நடத்துவது பற்றிய யோசனையை நண்பர்களுடன் விவாதித்துக் கொண்டிருந்தார் காந்திஜி. அங்கு வந்து சேர்ந்தார் பாரதியார். வாசலில் நின்ற வ. ரா. அவரை உள்ளே விடுவதா என்று யோசிப்பதற்குள்ளேயே பாரதியார் ''என்ன ஓய்! நீரா இங்கு நின்று கொண்டிருக்கிறீர்?'' என்று கேட்டுக் கொண்டே நேரே உள்ளே சென்று காந்திஜிக்கு அருகில் அமர்ந்து விட்டார். ''என்ன மிஸ்டர் காந்தி! இன்று மாலை நான் திருவல்லிக்கேணியில் ஒரு கூட்டத்தில் பேசப் போகிறேன். நீங்கள் தலைமை வகிக்க முடியுமா?'' என்று கேட்டார். காந்திஜி அமைதியாகத் தமது காரியதரிசி மகாதேவ தேசாயிடம், அன்று மாலை தமது அலுவல் என்ன என்று கேட்டார். வேறு ஏதோ அலுவல் இருப்பதை அறிந்து, அதைக் குறிப்பிட்டு, ''நீங்கள் உங்கள் சொற்பொழிவை நாளைக்கு வைத்துக்கொண்டால் வருகிறேன்'' என்றார். பாரதியார், ''நாளைக்கு வைத்துக் கொள்ள முடியாது. சரி, பரவாயில்லை. நீங்கள் ஆரம்பிக்க இருக்கும் இயக்கத்துக்கு எனது ஆசீர்வாதம். நான் வருகிறேன்'' என்று சொல்லிவிட்டு, 'விர்' என்று வெளியே வந்து விட்டார். காந்திஜி, ''வந்தவர் யார்?'' என்று கேட்ட பொழுது ராஜாஜிதாம், ''அவர் எங்கள் தமிழ் நாட்டுத் தேசிய கவி'' என்று சொன்னராம். ''இவரை ஜாக்கிரதையாகப் பாதுகாக்க வேண்டும். அதற்குத் தமிழ் நாட்டில் தகுந்த ஆட்கள் இருப்பார்கள் என்று நம்புகிறேன்'' என்று காந்திஜி சொன்ன குறிப்பிலிருந்து அவர் பாரதியாரின் மேதையையும், தனித்தன்மையையும் உணர்ந்திருந்தார் என்று தெரிகிறது.

ஃ ஃ ஃ

★ காந்திஜியை 'மகாத்மா' என்று 'அதிகார பூர்வமாக' முதலில் அழைத்தவர் ரவீந்திர நாத தாகூர். 'உழவர் உடையில் ஒரு மகாத்மா' என்று முதலில் எழுதினர் நோபல் பரிசு பெற்ற கவிஞர்.

ஃ ஃ ஃ

★ லண்டனில் காந்திஜியின் பாதுகாப்புக்காக ஸ்காட்லாந்து யார்டைச் சேர்ந்த இரண்டு ஆஜானுபாகுவான போலீஸ் அதிகாரிகள் நியமிக்கப் பட்டிருந்தார்கள். சாதாரணமாகப் பெரிய மனிதர்கள் செய்வது போல் காந்திஜி அவர்களை உதாசீனப்படுத்தவில்லை. மாறாக அவர்களோடு சரளமாகப் பொது விஷயங்களைப் பற்றிப் பேசினர். அவர்களது வீடுகளுக்கும் சென்றார் காந்திஜி. இந்தியாவுக்குத் திரும்பும் போது இத்தாலியிலிருந்துகப்பல் ஏறினர். அந்த இருவரும் தம்முடன் இத்தாலி வரைக்கும் வர அனுமதிக்குமாறு அவர்களது தலைமை அதிகாரியைக் காந்திஜி கேட்டுக் கொண்ட போது அவர் வியப்பினல் ''எதற்காக அப்படிக் கேட்கிறீர்கள்?'' என்று கேட்டார்: ''வேறு ஒன்றும் இல்லை. அவர்கள் எனது குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் மாதிரியே ஆகிவிட்டார்கள். அதனல்தான்'' என்றார் காந்திஜி. இந்தியா திரும்பியதும் அவர்கள் இருவருக்கும் ஆளுக்கு ஓர் அழகிய கடிகாரம் —''அன்புடன் எம். கே. காந்தியிடமிருந்து'' என்று பொறிக்கப்பட்ட எழுத்துக்களுடன்— அனுப்பி வைத்தார் மகாத்மா.





# மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் கொடுத்து



மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் அஜீரணத்தைத் தடுக்கிறது. அதிலும் குறிப்பாக குழந்தை களுக்குப் பருவ தோன்றும்போது பெருமளவில் உதவுகிறது

குடலில் ஏற்படும் திருகுவலி போன்ற வயிற்று வலி சம்பந்த மான தொல்லைகளைப் போக்கி, சுகமான நித்திரை உண்டாக்கு கிறது.

வயிற்று வீக்கங்களை- உப்புசங்களைப் போக்கி, காற்று பிரிவதற்கு உதவுகிறது.

உடல் நலத்தைப் பாதுகாத்து, குழந்தை அமைதியுடன் உறங்கவும் உறுதுணை புரிகிறது.

# மீண்டும் புன்னகை தோன்றக் காணுங்கள்





ஒரு நாளைக்கு இருமுறை வீதம் ஒவ்வொரு நாளும்
**மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர்**
கொடுத்து வந்தால், உங்கள் குழந்தை உற்சாகத்துடனும், உடல் நலத்துடனும் காணப்படும்.

**GEOFFREY MANNERS & COMPANY LIMITED**

ASP/GM 18 TM.

# அம்பாளும் அம்மாளும்

## வாசவன்

**ப**னித் துளியைப்போல் இரவும் பகலும் மாறி மாறிக் கொட்டிக் கொண்டே இருக்கு. வெயில் பட்டதும் பனித் துளி பட் பட்டுன்னு உடைஞ்சு போறமாதிரி இரவும் வெடிச்சு, பகலும் வெடிச்சு.....இப்படி வெடிச்சிண்டே இருக்கிற ஓர் ஒழுங்கினைத்துக்குப் பேரு 'காலம்'னு சொல்றா பெரியவா.

ம்கூம்! பெரியவாதானு சொல்றா? அடுத்தாத்து அம்முக்குட்டி இல்லே — துள்ளத் துளிரூண்டு—அவகூடத் தான் சாயந்திரம், 'உங்க காலண்டா ராமு'ன்னு!

நான் அவளைவிடக் கொஞ்சம் துளி சின்னவன். இரவும் பகலுமா விழிச்சிண்டே இருக்கிற காலம், எப்படி எங்க காலமாயிட்டதுங்கிறது எனக்குப் புரியல்லே.

ஆனா அம்மா பெருக்கிண்டு இருக்காளே கண்ணீர், அதுக்குப் பேருதான் காலம்கிறது. கொஞ்சமாப் புரிகிறது. காலம்னாலே அழுகைதானா?

அப்படீன்னா இந்தக் காலம் எங்காத்துக்கு ஏன் வரணும்?

அப்போ நான் தூங்கிண்டிருக்கேன். காத்தாலே யிருந்து எனக்குக் கொள்ளே அலேச்சல். பட்டணத்து மாமா இருக்கார் பாருங்கோ,-அதுதான் கோடியாத்து மாமா — அவரோடே பிள்ளே சாமா லீவுக்கு வந்திருக்கான். அவனும் நானும் ரொம்ப பிரண்ட்ஸ். பிரண்ட்ஸுன்னு சிநேகிதர்களாமே! சாமாதான் சொன்னான்! அவன் எனக்குப் புரியாததை யெல்லாம் பேசிண்டே யிருப்பான். "என்னடா சாமா பேசறே?"ன்னு கேட்டால், 'இங்கிலீஷ் பேசறே'ன்னு நெஞ்சை நிமிர்த்திண்டிடுவான். அவனைவிட அவன் பேசற இங்கிலீஷ் எனக்கு ரொம்பப் பிடிச்சுப் போயிடுத்து. இங்கிலீஷ் புரியலே யானால் என்ன? புரியறதெல்லாம் மட்டும் பிடித்துப் போயிடறதா? இன்னிக்கு அவன் ஐயனார் கோயிலேப் பார்க்கணும்னுட்டுச் சொன்னான். ஊருக்கு அப்பாலே, ரெண்டு மைல் தொலேவிலே கந்தல் துணிமாதிரி காலத்துக்கும் ஜலம் இல்லாமே விரிஞ்சு கிடக்கிறதே விரிசலாறு. அந்த ஆற்றங்கரையிலே இருக்கு ஐயனார் கோயில். அவனே இழுத்துண்டு கிளம்பிப் போய்ச் சேர்க்கிறதுக்குள்ளே, என் கெரண்டைக் கால் நரம்பெல்லாம் இழுத்திண்டுடுத்து. ஆளே உயரத்துக்கு இருந்த ஐயனார் கோயில் குதிரையை, மைனாக்குருவியின் இறக்கையைப் போல் விழியை விரிச்சுப் பார்த்திண்டே இருந்த சாமா, உச்சிப் பொழுது சாய்கிற வரை அசையவே மாட்டேனுட்டான். என்னோட பிரண்ட் சாமா.

அம்மா மடியிலே நெருப்பைக் கட்டிண்டு இருப்பா. அவள் அலறிப் புடைக்கிற மாதிரிதான் நானும் எதையாவது, எங்கேயாவது செஞ்சிண்டிருப்பேன். ஊர் எல்லேக்குள்ளே இந்நேரம் என்னே வலே போட்டுத் தேடி இருப்பா. என்னைக் காணலேன்னதும் துடியாய்த் துடிச்சிண்டிருப்பா. நான் ஆத்துக்குப் போயாகணும். சாமாவை இழுத்துண்டு நான் ஆத்துக்குத் திரும்பிப்போறப்போ, அம்மா என்னே, 'என்ன ஏது?' என்று ஒரு வார்த்தை கேட்கலே. அவ கையிலே இருந்தது என்ன கழியா, கழுத்தறுப்பா? என் முதுகை வரி வரியாய்ப் பிளந்து தள்ளிட்டா.



அவளோட அன்புக்கு எவ்வளவு ஆழம்ங்கறதை நான் இன்னை அடிகளை வெச்சுப் புரிஞ்சிண்டேன். அதோட அன்பு ஆழமாயிருந்தா, முதுகு எவ்வளவு அகலமா இருக்கணும்ங்கறதையும் புரிஞ்சிண்டேன் !

ஆயிடுத்து. பசி அடங்கிப் போயிடுத்து. எதையோ ரெண்டு கொரிச்சிட்டுக் கையை அலம்பறப்போ, யாரோ இமை மேலே நின்னுண்டு கண்ணை இழுத்து இழுத்து மூடின மாதிரி இருந்தது.

முறிச்சுப் போட்ட சின்னக் கிளை மாதிரி கையையும் காலையும் அகலமாப் பரப்பிண்டு திண்ணையிலே சித்தே விழுந்தேன். கட்டெறும்பைப் போல் கண்ணிமை பரபரன்னு ஊர்ந்திண்டே போய், என்னைத் தூக்கத்திலே வெச்சித் தொட்டில் ஆட்டிடுத்து.

'வீல்'னு ஓர் அலறல். அந்த அலறல் பாம்போ பல்லியோ கடிச்ச மாதிரி இல்லே. அந்த அலறலே நான் ஊரிலே கேட்ட ஒவ்வொரு முறையும், யாராவது தனக்கு வேண்டியவாளைப் பறி கொடுத்து நின்னுண்டிருக்கா.

இப்போ அலறுகிறது யாரு? பறி கொடுத்தவா யாரு? பதறப் பதற விட்டுட்டு ரெண்டு கண்ணுக்கும் கனமாப் பூட்டுப் போட்டுண்டு போன பாவி யாரு ?

குலுக்கிப் போட்ட மாதிரி கண் திறக்கிறேன். உள்ளே ஓடறேன்.

கூடமே கொள்ளாமக் கூட்டம். ஒட்டினவா சித்த விலகினவாங்கற வித்தியாசமே இல்லாம பேரீச்சம் பழத்தைப் போல அடைசலாகவும், கசகசப்பாகவு மிருக்கிறது கூட்டம்.

ராக்கெட்டுன்னு ஒண்ணுமே! ஏவி விட்டவுடனே அது இலக்குத் தவறுமே பாய்ஞ்சு போருமாமே! தாசில்தார் ஆத்துப் பேப்பர் மாமா சொன்னது. இன்னும் என் நினைவிலே முடி போட்டிண்டு இருக்கு.

நான் என்னங்கறது புரியாமே, எனக்குப் புரியாமே இருக்கிற விஷயம்தான் எங்காத்திலே நெருப்புப் பொறியாத் தாறிண்டு வந்து நிற்கிறதுங்கிறதை மட்டும் புரிஞ்சிண்டு திகைச்சுப் போய் நின்னுண்டிருக்கேன்.

''ராமு....'' அந்தக் கூட்டத்தைக் கத்தி போல் பிளந்துண்டு அம்மா ஓடி வர்ரு.

அவளைச் கத்திப் போர்வையாப் போர்த்திண்டு நின்ன கூட்டத்துக்கு வெளியே நின்னுண்டிருந்த என்னை, அவளாலே எப்படிப் பார்க்க முடிஞ்சது? மனுஷனுடைய லட்சியத்தை இலக்கா வைச்சிண்டு பாய்கிற ராக்கெட்டின் விஞ்ஞான தத்துவம் மாதிரி, என்னைக் கண்ணுக்கு அப்பாலேயும் பார்க்கிற தத்துவம் அவளண்டை என்னமாத் தோணித்து?

'' அனாதையாயிட்டோமடா கண்ணே!'' என்று அலறி அடிச்சிண்டு, என்னைக் கட்டிக்கிண்டு, என் சின்ன உருவத்தை அழிச்சிடற மாதிரி கண்ணீராக் கொட்டறு.

எனக்கு அவளோட பேச்சுப் புரியலே. ஆனா அழுகை புரியறது. 'அழுகை நெஞ்சோடே பாஷை'ன்னு அப்பா என்னிக்கோ சொன்னது, இன்னிக்கு நிஜமாகிண்டிருக்கு. அவளோட நெஞ்சம், என்னோடே நெஞ்சம் அந்த அழுகை மூலமா பேசிண்டிடுத்து.

''அம்மா''ன்னு நான் அலர்றேன்.

ஒரே நிமிஷத்திலே என்னோட பலத்தையெல்லாம் யாரோ வாங்கிண்ட மாதிரி அழக்கூட முடியாமே அம்மாவையே பார்த்துண்டு நிக்கறேன்.

புதுக்கோட்டையிலே பீடம் அமைச்சிண்டு இருக்கிறாளே புவனேசுவரி அம்பாள், அவள் மாதிரியேதான் இருப்பா அம்மா. வேணு கோபால சர்மான்னு ஒரு மாமா. அப்பாவுக்கு வேண்டியப்பட்டவர். எங்காத்துக்கு எப்போதாவது வருவார். கனியக் கனிய வெத்திலே போட்டுண்டு அரசியல் தலைவர் மாதிரி வாயை வைச்சிண்டு பேசறது. பெரிய பாடகர் மாதிரி பாடறது. காக்கா மாதிரி கத்தறது—இப்படி யெல்லாம் விகடம் செய்து காட்டுவார். அதோட அவர் பெரிய சித்திரக்காரர். அந்தச் சர்மா மாமா புவனேசுவரியைப் பிரமாதமாப் படம் போட்டிருக்கார். அந்தப் படத்திலே ஒண்ணை ஒரு நாள் எங்கப்பாவிடம் கொடுத்து, 'புவனேசுவரிக்கு இப்படி ஒரு உருக் கொடுத்தது யார் தெரியுமா? உங்க மனைவி'தான்னு சொன்னார். அப்பா பயந்து போயிட்டார். 'அபசாரம், அபசாரம்! இவ கேவலம் மனுஷப் பொறப்பு. தெய்வத்துக்கு இவ போய் உருவம் கொடுக்கிறதாவது'ன்னார். 'பெண்கள் கேவலமான மனுஷப் பொறப்பு எடுக்கிறதில்லே ! ஒவ்வொரு பெண்ணும் அம்பாளின் அவதாரம்'னு சர்மா மாமா ஒரு போடு போட்டுட்டார்.

இப்போ அந்தப் புவனேசுவரிக்கு உருக் கொடுத்த 'அம்பாளின் அவதாரம்', 'நான் தெய்வம் இல்லே. கேவலம் மனுஷப் பிறப்பு. என்னாலேயும் அவஸ்தைப்பட முடியும். என்னாலேயும் இழக்க முடியும். என்னாலேயும் அடிச்சிண்டு அழமுடியும்'கற மாதிரி நிற்கிறது.

அம்மாவோடே நெத்திக் குங்குமம் எங்கே? அவ தெய்வமானா, அவளோட பொருளை அபகரிச்சிண்டு போகிறதுக்கு யாராலேயும் முடியுமா? அவ மனுஷிதான். சாதாரண மனுஷப் பொறப்புத்தான். அப்பா அன்னிக்கே சொன்னாரே! சர்மா மாமாதான் தப்பாச் சொல்லிட்டார். ஒரு துளிக் குங்குமத்தைக் கூடக் காப்பாத்திக்க முடியாத மனுஷப் பொறப்பை அம்பாள் அவதாரம்னாரே அவர்!

நான் தெரிஞ்சிண்டது, திரும்பத் திரும்பத் தெரிஞ்சிண்டது, விழுங்க முடியாமலும் துப்ப முடியாமலும் மத்தவாளாலே திணிக்கப்பட்டது எல்லாம் இதுதான்: ''அப்பா போயிட்டார்! யாரோ தந்தி கொடுத்திருக்கா!''

மதுரைக்கு ஒரு ஜோலியாகத்தான் போனார் அப்பா. மதுரைக்குத்தான் போவார்னு நாங்க நினைச்சிருந்தோம். ஆனா யமலோகத்துக்கே போவார்னு நாங்க என்ன கண்டோம்?

'அப்பா, உனக்காவது போற இடம் புரிஞ்சுதோ ? நீ சதா சிரிச்சிண்டே இருப்பே. கோபம்கூட உன் உதட்டைச் சிரிப்பிலேயிருந்து பிடுங்கி எடுத்துண்டது இல்லையே! நீ வருகிறதுக்கும் சிரிப்பே. போகிறதுக்கும் சிரிப்பே. உனக்கு எல்லாமே சிரிப்புத்தான். ஆனா எங்களுக்கு எல்லாமே அழுகை ஆயிட்டதே அப்பா!'

அப்பாவுக்காக நாங்கதானா அழறோம்?

''எங்களைத் தவிக்க விட்டுட்டுப் போயிட்டீகளே மகாராசா! எங்களுக்கு இனிமே யாரு

# "எப்பொழுது பார்த்தாலும் சமையல் வேலைதானா ?"



## இல்லை இல்லவே இல்லை !

நான் போர்ன்-விடா சாப்பிடுகிறேன்.
தினசரி இரண்டு கப் சாப்பிடுகிறேன்
போர்ன்-விடா அளிக்கும் சக்தியினால்
சமையல் வேலை அரை நொடியில்
முடிந்துவிடுகிறது.

# BOURN-VITA

சக்திக்கும் வலிமைக்கும்






தயாரிப்பாளர்கள்:

Cadbury's

கஞ்சி ஊத்துவா ?''ன்னு வாசலிலே நின்னுண்டு கதறுகிருனே காத்தான் மகன் காளிப் பயல், அவன் யாரு ?

''நால் போதும், நாலின் நயம் போதும் வாழ்ந்தீர்களே, சாமிநாதன், உங்களுக்கா இந்த அநியாயச் சாவு?''ன்னு திண்ணையிலே இருந்து அலறுகிருரே தமிழ்ப் பண்டிதர் அம்பலவாண பிள்ளை, அவர் யாரு?

''ஊரிலே பக்தி கோபுரமாக எழுந்து நிற்கணும்கிறதுக்காக அம்பாள் கோயிலைக் கட்ட ஆரம்பிச்சிங்களே, இனிமே அதை யாரு கட்டி முடிக்கக் கும்பாபிஷேகம் பண்ணப் போருங்க?''ன்னு புலம்புகிருரே விசுவநாத ஸ்தபதி, அவர் யாரு?

உறவிலே அவாளெல்லாம் யாரோதான். ஆனு அப்பா அத்தனை பேருடைய மனசிலேயும் கோபுரமாக நின்ருர்.

மனசை அகலமாகத் திறந்து வைச்சிண்டிருந்தவரின் வீடு கொள்ளலே. வாசல் கொள்ளலே. ஜனம் வெள்ளமாப் புரண்டு வந்து நிக்கிறது. இங்கே வெள்ளத்தைப் புரள வச்சிட்ட அப்பா, மதுரையிலே, ஒரு கார் மோதி நசுங்கி, அனுதை என்று முனிஸிபாலிடிக்காரன் கொண்டுபோய் எரிக்க, சாம்பலாயிட்டார்.

பொழுதும் எரிஞ்ச மாதிரிதான் அவிஞ்சு போயிடுத்து.

வெள்ளம் வடிஞ்சிண்டே இருக்கு.

அம்மா மூலையும் அழுகையுமா அவள் உலகத்தை ஸ்தாபிச்சிண்டிருக்கா.

யாரோ விளக்கை ஏத்தரு. அதுவும் அழறது.

நான் இப்போ குலுங்கிக் குலுங்கி அழலே. கண்ணீர் மட்டும் பெருகிண்டே இருக்கு.

கூடம் நெறையப் படம்.

அதோ சர்மா மாமா கொடுத்த புவனேசுவரி. பதினுயிரம் கோடி உலகத்தைக் காப்பாத்துகிற அருள் அவள் முகத்திலே.

'ஏண்டியம்மா புவனேசுவரி, பல்லாயிரம் கோடி புவனங்களை நீ காப்பாத்துகிற லட்சணம் இருக்கட்டும். உனக்கு நித்தம் சஹஸ்ர நாமம் பண்ணினுனே ஒருத்தன், உனக்குக் கோயில் கட்டிண்டிருந்தானே ஒரு பைத்தியக்காரன், அவனைமட்டும் நீ ஏன் காப்பாத்தலே?'

அதோ அப்பாவும், அம்மாவும். அது கல்யாண சமயத்திலே எடுத்த படமாம். அப்பா தோளோடே ஒட்டிண்டு நிக்கரு அம்மா. நாலு பேர் பார்ப்பாளேங்கிற வெட்கம் இல்லாமே அம்மாவுக்கு அப்படி என்ன ஒரு ஒட்டலோ!

நான் ஒரு தடவை அந்தப் படத்தைப் பார்த்துச் சிரிச்சேன்.

அம்மா அதைப் பார்த்திண்டே இருந்தா. ''என்னடா ராமு சிரிக்கறே?''ன்னு கேட்டா.

''உனக்குக் கொஞ்சங்கூட வெட்கமே இல்லேம்மா!''ன்னேன் நான்.

''என்னடா வெட்கம்? அவர் என்னோட தெய்வம். தெய்வத்தை நெருங்கி நிக்கற பாக்கியம் கிடைக்கிறப்போ, விலகி நின்னுண்டு வெட்கப்படலாமோ?''

சர்மா மாமா இவளை 'அம்பாள்'ன்னுர். இவள் அப்பாவைத் 'தெய்வம்'கரு. இந்தத் தெய்வங்களெல்லாம் யாருக்குப் புரியறது?

# பேட்டிப் பரீட்சை



ஐ. ஏ. எஸ். போன்ற அகில இந்திய உத்தியோகங்களுக்குத் தேர்ந்தெடுக்க 'பெர்ஸனுலிடி டெஸ்ட்' ஒன்று நடத்துகிருர்களல்லவா? இந்தப் பேட்டிப் பரீட்சைக்கென்று நிர்ணயிக்கப்பட்ட மார்க்குகளை 300லிருந்து 200க்குக் குறைத்திருக்கிருர்கள்.

இந்தப் பரீட்சை சம்பந்தமாகச் சில வேடிக்கையான கதைகள் உண்டு. மாணவனுக்கு எதையும் கவனிக்கும் உணர்ச்சி இருக்கிறதா என்று தெரிந்து கொள்வதற்காகக் கமிஷன் அங்கத்தினர்களில் ஒருவர், ''நீ எப்படி இந்த அறைக்கு வந்தாய்?'' என்று கேட்டாராம்.

''மாடி வழியாக ஏறி வந்தேன்'' என்ருன் மாணவன்.

''அதில் எத்தனை படிகள் இருக்கின்றன?''

''இருபது'' என்று மாணவன் பதிலளித்து விட்டான்.

ஏனென்ருல், மாடிப் படிக் கேள்விக் கதை அவனுக்கு ஏற்கெனவே தெரியுமாதலால் படிகளை எண்ணிக் கொண்டுதான் மாடியில் ஏறிச் சென்ருன் அவன்.

ஓர் அங்கத்தினர் ஒரு மாணவனை ''ஒருவன் பீரங்கியால் சுடப்பட்டு உயரே தூக்கி எறியப்படுகிருன். நீ அவனுக்கு என்ன செய்வாய்?'' என்று கேட்டார்.

''அவன் கீழே விழும் வரையில் காத்துக் கொண்டிருப்பேன்'' என்று பதில் வந்தது.

அங்கத்தினருக்குக் கோபம் வந்து விட்டது. ''நீ இதுமாதிரி துடுக்குத்தனமாகப் பதில் சொன்னதற்காக நான் உன்னைக் கையால் குத்திக் கீழே தள்ளி விடுவதற்குக் கையின் எந்தத் தசை நாரை இயங்கச் செய்ய வேண்டும் ?'' என்று கேட்டார்.

''என் பலமான வலது கையின் தசை நார்களை. ஏனென்ருல், பதிலுக்கு நான் தங்களைக் குத்தி வீழ்த்தி விடுவேன்'' என்று மாணவன் பதிலளித்தான். அவன் இராணுவ ஸர்வீஸில் சேர வந்தவன்.

''உலகத்தின் சிறந்த அறிஞர்கள் அறுவர் யார்?'' என்று ஓர் அங்கத்தினர் ஒரு மாணவனைக் கேட்டார்.

''ஸோக்ரதர், பிளேட்டோ, அரிஸ்டாட்டல், எமர்ஸன், காந்திஜி..... என்று கூறி விட்டுச் சற்றுத் தயங்கினுன் அவன். ''இங்கே தலைவரின் பெயர் எனக்குத் தெரியாது. அவர் தான் ஆருவது அறிஞர்'' என்று மெதுவாகக் கூறினுன்.

ஒரு மாணவன் மிகவும் கெட்டிக்காரன். சர்வகலாசாலைப் பரீட்சைகளில் எல்லாம் முதல் மார்க்குகள் வாங்கியவன். ஆனுல் பேட்டியில் கேள்விகளுக்குச் சட்டென்று பதில் சொல்ல வரவில்லை.

''உனக்கு இந்தப் போட்டியில் தேர்வு போடா விட்டால் என்ன செய்வாய்?'' என்று ஓர் அங்கத்தினர் கேட்டார்.

''கடவுள் இருக்கிருர். பார்த்துக் கொள்வார்'' என்று கூறி விட்டு அறையை விட்டு வெளியேறிச் சென்ருன் மாணவன்.



ஒருவர் : எனக்கு ஒரு வேலே போட்டுக் கொடுப்பார்னு நினேச்சு அந்த பாங்கு மானேஜரை இந்திரன், சந்திரன்னு ஒரு மணி நேரம் முகஸ்துதி பண்ணினேன். ஆனல் கடைசியில் எல்லாம் கெட்டுது!

மற்றவர் : ஏன், முகஸ்துதி பண்ணியதற்குக் கோபப்பட்டாரோ மனுஷன்?

முதல்வர் : ஆசாமிக்குக் காது சுத்தமாகக் கேட்காதுன்னு கடைசியிலேதான் தெரிஞ்சுது.

**பா**தி ஜாமம் இருக்கும்.

எனக்குத் தூக்கம் வரலே. பொழுதோட தூங்கிறவனேடே தூக்கத்தை இன்னிக்கு யார் பறிச்சிண்டு போனு? அப்பாவாத்தான் இருக்கும். அவர் இன்னிக்கு எங்களிடத்திலே எதுவுமே மிஞ்சப்படாதுங்கற வெறியிலே எல்லாத்தையும் பறிக்க ஆரம்பிச்சிருக்கார். வயித்துக்கு ஒன்றும் போடல்லே.

'என் பூவையும் மஞ்சளேயும் எடுத்திண்டு, என்னேத் தனியேவிட்டுட்டுப் போயிட்டேளே! நான் மட்டும் இருப்பேனு? மாட்டேன்!' அப்படீன்னு அடிக்கடி கதறிண்டிருந்த அம்மாவோட குரல் இப்போ கேட்கலே.

அம்பாள் கதறிக் கதறிக் களேச்சுட்டாளோ? அம்பாள் களேக்கிறதாவது? அவ ஓய்வுக்குள்ளே ஒடுங்கி, 'இந்தாங்கோடா உங்க உலகம்'னு உலகத்தை உதறி எறிஞ்சிண்டு போற வெறியிலே லயிச்சுப் போயிருக்காளா?

நான்தான் களேச்சுப் போயிடறேன்.

கதவை யாரோ திறக்கறு.

நான் எழுந்திருக்கிறேன். மெதுவாக நடக்கிறேன்.

கதவைத் திறந்திண்டு போறவ—

அம்மா !

எங்கே போறு?

அவ காலடிக்கு நிழலாகி நானும் போயிண்டிருக்கேன்.

எங்களுக்குப் பின்னலே வீதி. ஊர் எல்லே எல்லாமே போயிடறது.

ஊமை நிலா உளறிண்டு கிடக்கு.

அம்மா இன்னும் போயிண்டே இருக்கா.

அதோ தெரியறது ஊட்டி முறிச்சான் கிணறு. எங்க ஊரிலே உயிர்ச் சுமையைக் குறைக்க விரும்பறவாளுக்கு அதுதான் துணே.

அம்மா அந்தக் கெணத்தை நோக்கிப் போறு. மேலே கூட ஏறிட்டா.

''நில்லம்மா!'' அலறி அடிச்சிண்டு ஓடறேன் நான்.

''ராமுவா?......'' பயந்த மாதிரி அவள் குரல் நடுங்கித்து.

அவ பயந்ததுதான் நியாயம். கோழைகள் பயப்படாமே என்ன செய்யறது?

''ராமுவாடா!'' பயத்தை மறுபடியும் ஊர்ஜிதப்படுத்திக்கப் பார்க்கறு அம்மா.

''ஊம்......''

''எங்கேடா வந்தே நீ?''

''நீ எங்கேம்மா வந்தே?''

அவ பிடிபட்ட அதிர்ச்சியிலே ஊமையா நின்னுண்டிருக்கா.

''நீ சொல்ல வாண்டாம். நானே நன்ருகப் புரிஞ்சிண்டிருக்கேன். உனக்குப் பூவும் குங்குமமும் பெரிசாப் போயிடுத்து. அதெல்லாம் இல்லாமே உன்னுலே வாழ முடியல்லே. நீ அம்பாள் இல்லேம்மா. சுயநலக்காரி....'' நானு பேசறேன்? நான் பேசலே. தியாமாறிண்டு கொளுத்தறேன்.

''ராமு......''

''நீ எவ்வளவுதான் அலறினுலும் சுயநலக்காரிதான். வாடுகிற பூவும், வேர்வையிலே அழியற குங்குமமும்தானு வாழ்க்கை? நான் உன்னேட வாழ்க்கையில்லே? உன்னேட உசிரும் ரத்தமுமா இருக்கற என்னே உதறி எறிஞ்சிண்டு பூவுக்காக உயிர்விடப் போறயே, நீதான் அம்மாவா? நீதான் சர்மா மாமாவோடே அம்பாளா?''

''ராமு.... என்னேட சுயநலம் புரியறுடா...... என்னே மன்னிச்சுக்கோடா....'' அலறி அடிச்சிண்டு வந்து, என்னேக் கண்ணீராலே கட்டிக் கொள்ளறு அம்மா.

''அப்போ நீ அப்பாவுக்காக அழுதே. இப்போ நீ எனக்காக அழறே. உன்னுடே சொத்துக்காகத்தானே நீ அழக் கத்துண்டிருக்கே ! அப்பா அப்படியில்லே! ஊருக்காக அழுதார். பக்தி குறைஞ்சிண்டே வருகிறதென்னு அழுதார். அவர் அழுத அழுகை ஒரு கோவிலா உருவாகிண்டிருக்கு......'' என்ன ஆவேசமோ எனக்கு!

எல்லாத்தையும் போட்டு உடைச்சிட்டதும் நான் பொங்கிப் பொங்கி அழறேன்.

''ஏண்டா ராமு அழறே?'' அம்மா என்னேத் தன் உசிராலே போர்த்திண்டு பதர்ரு.

''அம்பாளுக்காக நான் அழறேன். கடவுளுக்காக நான் அழறேன்......''

அம்மா என் கண்ணேத் துடைக்கிறு.

''அம்பாள் அம்மாவாயிட்டாடா ராமு! இனிமே அவ அழமாட்டா !''

அம்பாளும் அம்மாவும் வேறில்லே !

ஊமை நிலா இப்போ மயங்கிக் கிடக்கிறது. மனேவியா இருந்தவ கெணத்தோடே போயிட்டா. அம்மாவா இருக்கிறவ இதோ என்னேடே வந்திண்டிருக்கா.

அம்பாளும் அம்மாவும் வேறில்லே !



# அன்புகொழிக்கும் அருமை வாழ்வு



அழகு மிளிரும் ஆல்வின் அவளுடைய மனதைக் கவர்ந்து விட்டது. சுவைமிக்க ஐஸ் கிரீம், நாவில் நீர் சுரக்கவைக்கும் ஜெல்லி, "சௌஃப்லே", "பிளமான்ஜ்", குளுமையான பழங்கள், குளிர்ந்த பானங்கள், நாள் முழுவதும் கிடைத்துக் கொண்டிருக்கும் பெருமளவு ஐஸ் ஆகியவை தந்து அவளைக் கொஞ்சி மகிழ்விக்கிறது ஆல்வின். அவளுடைய பெருமைக்கு அளவே இல்லை. இதைவிடச் சிறந்தது அவளுக்குக் கிடைத்திருக்காது.

**குறைந்த அளவு மின்சாரமே போதும்.**
மற்ற ரிப்ரிஜிரேடர்களைப்போலன்றி மாதந்தோறும் ஒரு சில ரூபாய் பெறுமான மின்சாரமே ஆல்வினுக்குப்போதும்.

**ஐஸ் உற்பத்தி விரைவில்.**
1½ மணி நேரத்திற்குள்ளேயே உங்கள் குடும்பம் முழுவதற்கும் தேவையான ஐஸ் கிடைக்கும். இவ்வகையைச் சேர்ந்த வேறு எவ்வித ரிப்ரிஜிரேடரும் இவ்வித பணியாற்றுவதில்லை.

**விசேஷ பாகங்கள்.**
டேபிள் டாப், வாட்டர் கூலர், குளிர் நீர்க்குழாய் (இதற்குத் தனியாகப் பணம் செலுத்த வேண்டும்.)

## விலை ரூபாய் 1,090

(எக்ஸைஸ் டூட்டியும் வரி தனி)

கொள்ளும்திறன் 4.4 கன அடி. சீல்டு யூனிட் 5 ஆண்டுகளுக்கு உத்திரவாதமளிக்கப்பட்டிருக்கிறது. ஓராண்டிற்கு இலவசச் சேவை.

ஆல்வின் வரிசையில்:
ஆல்வின் பிரஸ்ட்கோல்டும் (6.5 கன அடி) ஆல்வினும் (9 கன அடி) சேர்க்கப்பட்டுள்ளன.

# புதிய **ஆல்வின்**
## ரிப்ரிஜிரேடர் 4.4 கன அடி

தி ஹைதராபாத் ஆல்வின் மெடல் வொர்க்ஸ் லிட்., சனத்நகர்: ஹைதராபாத்-18

ATP/HAM/P-5 TAM

பம்பாய் ஆபீஸ்: ஆக்ரா ரோடு, பாண்டுப், பம்பாய் - 78

ஷோரூம்கள்:
15/1, ஆஸப் அலி ரோடு, புது டில்லி
பெங்கால் ஸ்டோர்ஸ், 8-A, சௌரங்கி பிளேஸ், கல்கத்தா
150-A, கிவ்ராஜ் மான்ஷன், மவுண்டு ரோடு, சென்னை
216, கன்பவுண்ட்ரி, ஹைதராபாத்

# சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி

பொறியியலும் பொருளியலும், வான இயலும், நில இயலும் கற்றுக் கொள்வதற்கு நிறைய வாய்ப்பு அளிக்கும் கோவை நகரிலே தாய்மொழி இயலையும் நன்கு கற்றுணர நல்லதொரு கல்லூரி செயல்படுகிறது என்பது வெளி ஊர்களிலுள்ள பல பேருக்குத் தெரியாமல் இருக்கலாம். சாந்தமும் அமைதியும் குடிகொண்டிருக்கும் திருப்பேரூர்ப் பகுதியில் கடந்த பத்து ஆண்டுகளாக இயங்கி வரும் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி இந்த மொழிப் பணியைச் செய்து வருகிறது.

கல்லூரி வாயிலில் நுழையும்போதே கம்பனின் கவிதை நினைவுக்கு வருகிறது.

**கற்றும் ! அப்புறம் நிற்கச் சுடுகணை**
**வில்துறந்து அரை வீக்கிய வாள் ஒழித்து**
**அற்றம் நீத்த மனத்தினன் அன்பினன்**
**நற்றவப் பள்ளி வாயிலை நண்ணினன்**

என்று கங்கைக்கரையிலுள்ள முனிவர் பர்ணசாலையை நெருங்கும் குகனை வருணிக்கின்ற இடம் அது. நொய்யல் ஆற்றங் கரையில் அழகுற ஆசிரமம் போல் நிற்கும் இந்தத் தமிழ் கற்பிக்கும் 'நற்றவப் பள்ளியை' அணுகும் போது நாமே வினயம் மிகுந்த குகனாக மாறி விடுகிறோம் என்றால் அது மிகையாகாது. கல்லூரி முதல்வர் இராமசாமி அடிகளாரே ஒரு முனி புங்கவரைப் போலத்தானே காட்சியளிக்கிறார் !





பதினேழாம் நூற்றாண்டில் திருப்பேரூரில் இல்லறத்தைத் துறந்து, துறவறத்தை மேற்கொண்டு மடம் அமைத்துச் சிஷ்ய கோடிகளுடன் வாழ்ந்த வீர சைவ சமயப் புலவரான தவத்திரு சாந்தலிங்க அடிகளாரின் நினைவுச் சின்னமாக ஒரு தமிழ்க் கல்லூரியைக் கோவை வட்டாரத்தில் தோற்றுவிக்க அந்த நகரத்துத் தமிழன்பர்களும் பிரமுகர்களும் முற்பட்டார்கள். சென்னை பல்கலைக் கழகத்தாரின் ஒப்புதலும் உடனடியாகக் கிடைக்கவே 1953ம் ஆண்டு ஜூன் மாதத்தில் இந்தக் கல்லூரி செயல்படத் தொடங்கியது.

இந்தக் கல்லூரியை நிர்வகிக்க முதல் குழு அமைத்தபோது காலம் சென்ற டாக்டர் ஆர். கே. ஷண்முகம் செட்டியார் தலைவராகப் பணியாற்றினர். குழுவின் செயலாளராகவும் முதல், முதல்வராகவும் தொண்டாற்றியவர் கோவைக் கிழார் திரு சி. எம். ராமச்சந்திரன் செட்டியார் ஆவர்.

திரு - ராமச்சந்திரன் செட்டியாரைத் தொடர்ந்து திரு கு. நடேச கவுண்டர் சிறிது காலம் முதல்வராக இருந்தார். அவருக்கடுத்தாற்போல வந்து இப்போது முதல்வர் பணி செய்பவர் திரு இராமசாமி அடிகளார். இவர் மைலம் தமிழ்க் கல்லூரியில் பயின்றவர். சிவஞானபாலை சாமிகளிடம் தீட்சை பெற்றவர். தவத்திரு சாந்தலிங்க சுவாமிகளை ஞான குருவாகக் கொண்டவர்.

இந்தக் கல்லூரியில் படித்து வித்துவான் பட்டம் பெறுவதற்குத் தேவையான காலம் நான்கு ஆண்டுகள். முதல் இரண்டு ஆண்டு காலப் படிப்புக்குப்பிறகு பூர்வாங்கப் பரீட்சை நடத்துகிறார்கள். பின் இரண்டு ஆண்டு காலத்துக்குப் பிறகு வித்துவான் பட்டத்துக்கான இறுதிப் பரீட்சை நடக்கிறது. இரண்டு பரீட்சைகளும் சர்வகலாசாலைப் பரீட்சைகள் தான். மாணவ மாணவிகள் இரு சாராருமே இந்தப் பட்டப் பரீட்சையை நாடி வருகிறார்கள். சென்ற ஆண்டில் இந்த விகிதாசாரம் சரிசமமாக இருந்ததாம். ஐம்பத்துநான்கு மாணவர்களும் ஐம்பத்து நான்கு மாணவிகளும் இருந்திருக்கிறார்கள்.

< முதல்வர் ராமசாமி அடிகளார்

சுதந்திரமாக உலாவும் மாணவ மாணவிகளின் கவனத்தைத் தமிழ்ப் பணிபால் திருப்பும் இந்தக் கல்லூரி சுதந்திரமிழந்த சிறைவாசிகளுக்கும் சிறந்த பணி செய்து வருகிறது.

கடந்த எட்டு ஆண்டுகளாக இந்தக் கல்லூரி மாணவர்களும் ஆசிரியர்களும் கோவை மத்திய சிறைவாசிகளுக்கு ஹிந்துமத போதனை நடத்துகிறார்கள். இவர்கள் முயற்சியால் சிறைச்சாலைக்குள் நடராஜர் — பஜனை மண்டபமே தோன்றியிருக்கிறது.

'மதமாவது கடவுளாவது?' என்று கேட்கும் பொதுவுடைமை வாதிகள்கூட இவர்கள் தொண்டில் மனம் இளகியுள்ளனர்.

'என்னைப் பொறுத்தவரை மனமாற்றம் ஏற்படுகிறது என்று சொல்ல முடியாது போனாலும் சமூக புனருத்தாரணத்துக்கு இத்தகைய போதனை அவசியம்' என்று ஒப்புக் கொண்டாராம் ஓர் அதிதீவிர கம்யூனிஸ்ட்.

''மண்வெட்டியுடன் வரப்பு வெட்டப் பகவான் வந்தார்' என்று புராணத்தில் வரும் சம்பவம் தொழிலாளியின் தத்துவத்தைத்தானே காண்பிக்கிறது' என்றாராம் மற்றொரு சிறைத் தோழர்.

சிறை வட்டத்துக்குள் கைதிகள் தங்கள் கைத் திறமையைக் காட்டும் வண்ணம் தீட்டியிருக்கும் நடராஜரும், ஆயிரம் பேர் அமரக் கூடிய பஜனை மண்டபமும், ரத்தின சபாபதி முதலியார் உபயத்தில் ஒலிக்கும் ஒலிபெருக்கிகளும், இந்தக் கல்லூரி ஆசிரிய மாணவக் குழுக்களின் அவ்வப்போதைய போதனைகளின் விளைவு. தண்டனைக் காலம் முடிந்து வெளி வருபவர்கள், உள்ளே போகும் போது இருந்த மன நிலையைவிடப் பன்மடங்கு உள்ளத் தூய்மை பெற்று வெளிவருவார்கள் என்று நிச்சயம் சொல்லலாமல்லவா?

சிறைவாசத்தை அநுபவித்துக் கொண்டே இந்தக் கோஷ்டியினரின் உதவியால் படித்து வித்துவான் பரீட்சை எழுதி வெற்றியும் பெற்ற பெருமை ஆறுமுகம் என்னும் நபரைச் சேரும்.

என்ன எழுச்சியும் அந்தச் சொற்களிலே இடையா; ஆனால் அவை பயன்படுத்தப்படும் முறையிலேதான் அமைந்துள்ளன'' என்று சொன்ன மேலைநாட்டு மேதை வில்லியம் ஹாஸ்லிட்டின் தத்துவத்தையும் அடிப்படையாகக் கொண்டு இங்கு பேச்சுவன்மை போதிக்கப்படுகிறது.

'வெறும் கல்வி மக்களுக்கு ஒழுக்கத்தைத் தருவதில்லை. சமயப் படிப்பே ஒழுக்கத்தைத் தரும்' என்ற அடிப்படையில் ஏனைய சமயத்தார் தங்கள் தங்கள் சமயங்களைக் கற்பிப்பது போல் இந்தக் கல்லூரியிலும் சித்தாந்தத்தைப் போதிக்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள். தம் வயோதிகத்தையும் பொருட்படுத்தாமல் முன்னாள் முதல்வர் திரு ராமச்சந்திரன் செட்டியார், வாரந்தோறும் குறிப்பிட்டநாட்களில் இங்கு வந்து பிரார்த்தனை வகுப்புகள் நடத்துகிறார்கள். கல்லூரி வட்டத்துக்குள்ளேயே சிவன் கோவிலும் இருக்கிறது.

இந்தத் தமிழ்க் கல்லூரியை உருவாக்கி வளர்த்த பெருமையைப் பல கோவை மாவட்டப் பிரமுகர்கள் பகிர்ந்து கொள்கிறார்கள். குறிப்பாகத் திரு வெ. சி. சுப்பையா கவுண்டர், ஆர். கே. ஷண்முகம் செட்டியார், ஸ்ரீமதி கௌசலாம்பாள், தேவராஜ முதலியார், நா. மகாலிங்க முதலியார் ஆகியோரைச் சொல்லலாம். திரு சுப்பையா





தமிழ் வணக்கமும் இறை வணக்கமும் சேர்ந்து நடைபெறுகின்றன — கோவைக்கிழார்

'மாணவர்கள் வெறும் கல்வி கற்றுப் பயனில்லை. அவர்கள் வித்துவான்களாகிப் பள்ளிகளில் கல்வி கற்பிக்கும் தொழிலை ஏற்கும் போது அவர்களுக்குத் தெளிவாகவும், பொருள் செறிந்ததாகவும் வறட்டுச் சொற்களை அடுக்கிக் கருத்தின்றிப் பேசாமலிருக்கவும் திறமை வேண்டும்' என்ற அடிப்படையில் இந்தக் கல்லூரி மாணவர்களுக்குப் பேச்சுப் பயிற்சி முறையே அளிக்கப்படுகின்றது.

**சொல்லுக சொல்லிற் பயனுள சொல்லற்க**
**சொல்லிற் பயனிலாச் சொல்**

என்ற வள்ளுவத்தையும், 'சொற்களின் பொருண்மையும் அவை தரும் உணர்ச்சியும்

கவுண்டர் எண்பத்தி ஆறு ஏக்கரா புஞ்சை, தோட்டம், மில் பங்குகள் எல்லாவற்றையுமே தாம் தமிழுக்குச் செய்யும் தொண்டின் பங்காக அளித்திருக்கிறாராம்.

வருங்காலத்தில் இந்தக் கல்லூரியின் கட்டடங்களும், வாசக சாலையும் பெரிய அளவில் விஸ்தரிக்கப்படவிருக்கின்றன. பெரிய தொழிலதிபரும் கல்வித் துறையில் நிறைய கவனத்தைச் செலுத்துபவரும், பொள்ளாச்சித் தொகுதி எம். எல். ஏ.வாக இருப்பவருமான திரு நா. மகாலிங்கம் செயற் குழுவின் தலைவராகப் பணியாற்றும் போது, கல்லூரியின் வருங்கால வளர்ச்சி பற்றி ஐயப்பட இடமே இல்லையே !

# சிறப்பு இதழும் சரித்திர நவீனமும்

உழவர் திருநாளாம் பொங்கல் நன்னாளில் ''விவசாய இதழ்'' வெளிவந்திருப்பது உழவர்களுக்கெல்லாம் ஒரு பொங்கல் படைப்பாகும். உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கான நல்ல பல விவரங்களை வெளியிட்டிருப்பது இதழை அரிய மலராக்குகிறது.

மூன்சிறை
10–1–64 டி. நல்லையா

ஃ ஃ ஃ

''விவசாய இதழி''ல் இடம் பெற்றுள்ள கட்டுரைகள் யாவும் அறிவு பெருக வழி காட்டுகின்றன. 'நாடு வியக்கும் நாகார்ஜுன சாகர்' நல்லதொரு கட்டுரை.

காங்கயம்
14–1–64 நா. கருப்பண்ணன்

ஃ ஃ ஃ

தங்கள் 12–1–64 இதழுக்கு 'விவசாய இதழ்' என்று பெயரிட்டது மிகவும் பொருத்தமாகும். ஆடுதுறைப் பண்ணையைப் பற்றிய கட்டுரையும், நாகார்ஜுன சாகர் பற்றிய வர்ணனையும் சிறப்பாக அமைந்துள்ளன. நம் நாட்டு விவசாயத்தின் குறைகளையும் அவற்றைப் போக்கும் முறைகளையும் தெளிவாக எடுத்துரைத்துள்ள திரு சிவராமனின் கட்டுரை பயன்மிக்க கட்டுரையாகும்.

நெய்வேலி
14–1–64 வு. வைத்தியராமன்

ஃ ஃ ஃ

விவசாயத்தில் நெல் உற்பத்தி குறைந்து வரும் இந்நாட்களில் ஆடுதுறை விவசாய ஆராய்ச்சியைப் பற்றி விவரித்திருந்தது வரவேற்க வேண்டிய விஷயம். திரு ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் அவர்களின் கடிதம் சில வார்த்தைகளைக் கொண்டதானாலும் பொன் எழுத்துக்களில் எழுதப்பட வேண்டியவை.

வந்தவாசி
16–1–64 வெ. இராஜாராம்

ஃ ஃ ஃ

''பத்தினிக்கோட்டம்'' என்னும் சரித்திர நவீனம் ஒப்பற்ற கருத்துப் பிடிப்புள்ள ஓர் அழகிய கதையாகும். ஆனால் இறுதியில் முடித்த முடிவு ரசிகர்களின் திருப்தியை முறித்த முடிவாகி விட்டது.

ஜே. நடராஜன்
மாமல்லை 16–1–64

ஃ ஃ ஃ

'பத்தினிக் கோட்டம்' சிறந்த படைப்பேயானாலும், சரியான முற்றுப் பெற்ற முடிவாகக் கொள்ள என் மனம் இடம் கொடுக்கவில்லை. பழையாறைச் சோழரை ஒரு சிறந்த இராஜ தந்திரியாகத்தான் படைத்தார். ஆனால் அவரின் பிற்கால நடவடிக்கைக்குத் தகுந்த காரணம் காட்டவில்லை. சளுக்கிய இளவரசனின் கதி என்னவாயிற்று? அவன் என்னவானான்? பத்தினிக்கோட்டத்தின் முக்கிய பாத்திரங்களான இளங்கோப் பிச்சி, கோவிந்தவர்மன் என்னவானார்கள்? இவை எல்லாவற்றுக்கும் விடை கூறாது முடித்தது, அவசரத்தில் முடித்தது போல் உள்ளது.

சென்னை
16–1–64 வி. என். சுந்தரம்

ஃ ஃ ஃ

தெளிந்த நீரோடையைப் போல் ஓடி முடிந்த திரு ஜெகசிற்பியனின் தொடர் நவீனம், சரித்திர மணிமுடியில் அவர் பதித்த வைரக் கல்லென ஜொலிக்கிறது.

புதுதில்லி
17–1–64 நா. ராஜாமணி

ஃ ஃ ஃ

'பத்தினிக்கோட்டம்' கதை ஆசிரியர் திரு ஜெகசிற்பியனுக்குக் கதையை முடிப்பதில் ஏனோ இந்த அவசரம்? 'சொர்க்கத்தின் நிழல்' கதையின் மூலம் வாசகர்களைத் திருப்திப் படுத்த முடியாத ஆசிரியர் 'பத்தினிக்கோட்டத்'தின் மூலமும் அதே தவற்றை இழைத்து விட்டார். கதையின் ஆரம்பத்தில் இருந்த விறுவிறுப்பு முடிவில் இல்லை.

சேத்தூர்
16–1–64 ந. இராசையா ஞானம்

ஃ ஃ ஃ

சரித்திர நாவல்களை உருவாக்குவதில் ''கல்கி''க்கு நிகர் ''கல்கி''யே யாகும்.

கதாசிரியர் ஜெகசிற்பியன் 'சொர்க்கத்தின் நிழல்' மூலம் தாம் சமூக நாவல் எழுதுவதில் வல்லவர் என்று 'கல்கி' மூலம் நிரூபித்திருந்தார். இப்போது ''பத்தினிக்கோட்டம்'' சரித்திர நாவலையும் உருவாக்கிக் 'கல்கி'மூலம் புகழ் தேடிக் கொண்டார்.

பட்டணம்
18–1–64 பி. வி. ஜெகதீசன்

ஃ ஃ ஃ

காதல் என்றதொரு கோட்டத்தில் தெய்வீக உணர்ச்சிகளான கல்வில் லிங்கமொன்றுசெதுக்கி, அதன் சந்நிதியில் பல்லவ சக்கரவர்த்தி பரமேசுவர வர்மனையும் சமணத்துக்கும் சைவத்துக்கும் தாயான அன்பே உருவாகிய உத்தமசீலியையும் ஆட்டி வைத்து அதைக் காணும் பல உள்ளங்களையும் தம் எழுத்திடமே லயிக்கச் செய்தார் பத்தினிக் கோட்டச் சிற்பி – ஜெகசிற்பியன். வினுவின் ஓவியங்கள் அற்புதம்.




புனே. 19–1–64
[குமாரி ராஜி

## 'சாலை ஓர நாகரிகம்!''

நதிக்கரை நாகரிகம் என்று நாம் சரித்திரத்தில் படித்திருக்கிறோம். இன்று சாலை ஓர நாகரிகம் என்ற புது முறை தோன்றியிருக்கிறது. கிராம ஆட்சி அலுவலகம், சமுதாய மண்டபம், ரேடியோ, (ரேடியோ என்பது அகில இந்திய ரேடியோ நிகழ்ச்சிகளை ஒலி பரப்ப அல்ல. ரேடியோ சிலோன் நிகழ்ச்சிகளைக் காலை ஏழு மணிமுதல் இரவு பத்துமணி வரை ஒலிபரப்ப!) வாசகசாலை எனப் பலப் பல விளம்பரப் பலகைகளைத் தொங்கவிட்டு, ஏதோ கிராமத்தில் சுபிட்சம் கொழிப்பது போலவும் மக்கள் நிம்மதியாக ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டதை அனுபவிப்பது போலவும் ஒரு நாடகம் நடத்தி வருவதைப் பஞ்சாயத்து ஆட்சி ஏற்பட்ட பின் கவனித்து இருக்கலாம்.

இதுவரை கிராம மக்கள் அனைவருடைய ஒத்துழைப்பாலும், அயராத உழைப்பாலும் நடைபெற்று வந்த விவசாய சம்பந்தமான ஜீவநாடியான வாய்க்கால் வெட்டு, இதர மராமத்து வேலைகள் இன்று பஞ்சாயத்துச் சபைகளிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளன. விவசாயத் துறையில் பாடுபட்டவர்களுக்கும், உழைப்பவர்களுக்கும்தான் அந்தப் பணிகளைப் பற்றித் தெரியும். அதைவிட்டு விஷயம் தெரியாதவர்கள் மேலெழுந்தவாரியாகச் செய்யும் காரியங்கள், நுனிப் புல் மேய்வது போன்ற நாசூக்கானவேலைகள் விவசாயத்தை வெகுவாகப் பாதிக்கும். அரசாங்கம் சம்பந்தப்படுகின்ற காரியம் என்றால் அரை குறைக் காரியம்தான் என்ற பழமொழி கூட இன்னும் சில நாட்களில் தோன்றலாம்.

எனவே, விவசாயத் துறையில் பஞ்சாயத்து நிர்வாகம் தலையிடாமல், ஊருக்கு வெளிச்சம் போடுவது, ரேடியோ வைப்பது போன்ற காரியங்களில் மட்டும் ஈடுபடுவது தான் சிறந்தது.

அரசவளங்காடு
8–1–64 கோ. ராமமூர்த்தி

## லட்சத்தில் ஒருவர்

'கல்கி' 29–12–63 இதழில் எதிராஜ் கல்லூரி பற்றி ஒரு கட்டுரை வெளியாகியிருக்கிறது. அதில் ஒரு பெண்கள் கல்லூரியை ஆரம்பிக்குமாறு ஸ்ரீ எதிராஜுக்கு ஸ்ரீ சுப்பராய அய்யர் யோசனை கூறியதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது சரியல்ல. நடந்தது சுருக்கமாக இதுதான்:

மயிலாப்பூர், ராமகிருஷ்ண மாணவர் இல்லத்தினைத் திறமையாக நிர்வகித்து வந்த காலஞ் சென்ற ஸ்ரீ வி. ராமானுஜாச்சாரியார், முதன் முதலில் என்னிடம் இது பற்றிப் பிரஸ்தாபித்தார். பெண்களுக்காக ஒரு கல்லூரி ஆரம்பிக்குமாறு நான் எனது நண்பர் எதிராஜைத் தூண்ட வேண்டும் என்றார். கல்லூரி ஆரம்பிக்க இரண்டு அல்லது மூன்று லட்சம் ரூபாய் தேவைப்படும் என்பதாகத் தெரிவித்தார். நான் இதைப் பற்றி ஸ்ரீ எதிராஜிடம் கூறினேன். அவரும் தமது வாழ்நாளில் பெண்கள் கல்லூரி ஒன்றினை ஆரம்பிக்கத் தீர்மானித்தார். கல்லூரிக்குச் சொத்து விட்டுச் செல்லும் வகையில் தமது உயிலை மாற்றி எழுதிக் கொண்டு வருமாறு என்னை அவர் கேட்டுக் கொண்டார்.

ஆனால் சென்னை சர்வகலாசாலை துணை வேந்தர் புதிய கல்லூரி ஆரம்பிக்கக் குறைந்த பட்சம் பத்து லட்சம் ரூபாயாவது வேண்டும் என்று அபிப்பிராயப்பட்டார். எதிராஜ் இதற்கு ஒப்புக்கொண்டு விட்டதாகப் பத்திரிகைகளில் எப்படியோ செய்தி வெளியாகி விட்டது. ஏராளமான பாராட்டுக் கடிதங்கள் வந்து குவிந்தன. ஆனால் உண்மையில் ஸ்ரீ எதிராஜ் தாம் இறந்த பிறகு கல்லூரிக்குத் தாம் விட்டுச் செல்கின்ற சொத்தின் மொத்த மதிப்பு பத்து லட்சம் ரூபாய் இருக்கும் என்றுதான் கூறியிருந்தார். எனினும் விஷயம் இவ்வாறாகப் பிரபலமாகி விட்டதால் ஸ்ரீ எதிராஜ் சற்றும் தயங்காமல் சிறிது காலத்துக்குள் தமது அபார சாமர்த்தியத்தினால் பத்து லட்சம் ரூபாய் சம்பாதித்துக் கொடுத்து விட்டார். இப்படியாக, அறிவும் அன்பும் பண்பும் ஒருங்கே அமையப் பெற்ற ஒருவருடன் நெருங்கிய தொடர்பு கொள்ளும் வாய்ப்பு எனக்குக் கிட்டியதைப் பெரும் பாக்கியமாக நான் கருதுகிறேன்.

மயிலாப்பூர் எம். ரங்கநாத சாஸ்திரி
8–1–64 (அட்வகேட், சுப்ரீம்கோர்ட்)



''பருமன் குறையணுமாம். அதனால் பங்கஜம் தினம் ஒரு படி உளுந்து அரைக்கிறாள்.''

''ஏதாவது பலன் தெரிந்ததோ?''

''தெரியாமல் இருக்குமா? இயந்திரம் தேய்ந்து விட்டது!''

## டாக்டர் ஸ்ரீஹரியின் டெல்லிப் பயணம்

4–2–64 சென்னையிலிருந்து புறப்பட்டு, 6–2–64 டெல்லி சேர்ந்து, அங்கு ஸௌத் இந்தியா கிளப்பில் தங்கி, 8–2–64 டெல்லியிலிருந்து புறப்பட்டு 10–2–64 சென்னை வந்து சேருகிறார்.




# தாலாட்டுப்பள்ளி

அனுசுயா



"ஆராரோ ஆரிரரோ....!"

இதற்கு என்னதான் அர்த்தமோ? தமிழ்நாடு முழுவதும் ஒவ்வொரு தாயும் பாடிக் கொண்டு வந்த, பாடிக் கொண்டு வரும் தாலாட்டுப் பாட்டின் இந்த முதலடியை யார் எந்த யுகத்தில், எந்த வருஷத்தில் முதன் முதலாகப் பாடத் தொடங்கியது?

அது கிடக்கட்டும்?

"ல்லெலெ ல்லெலெ ல்லெலெ ஆயி...."

தாலாட்டின்போது நமது வாயிலிருந்து கிளம்பும் இந்த விந்தையான சப்தக் கோவையின் வரலாறு என்ன?

உங்களுக்கு யாருக்கும் தெரியாது; எனக்குத் தெரியாது; செல்லரித்த சுவடிகளை வைத்துக் கொண்டு ஆராய்ச்சி செய்யும் பண்டிதர்களுக்கும் கூடத் தெரியாது. இதைப் பற்றி ஆராய்ச்சி செய்யலாமென்ற எண்ணமே இப்போதுதான் எனக்குத் தோன்றிற்று.

சென்னையில் நடைபெற்ற மார்கழி மாத சங்கீத மகாநாடு ஒன்றில் தலைமை வகித்து ரஸிகர் ஸ்ரீ எஸ். வை. கிருஷ்ணசாமி அவர்கள் சொன்னார்கள்: "தாய்மார்கள் சம்பிரதாயமான தாலாட்டுப் பாட்டுக்களை நன்றாகப் பாடத் தெரிந்துகொள்ள வேண்டும். அவர்களுக்கு அந்தப் பாட்டுக்களைச் சொல்லிக் கொடுக்கச் சங்கீதப் பள்ளிக்கூடங்கள் ஏற்படவேண்டும்" என்று.

இது பழைய விஷயத்தைப் பற்றிய மிக மிகப் புதிதான யோசனை. இதைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்த போதுதான் எனக்கு இந்த ஆராய்ச்சி விஷயம் மனத்தில் பட்டது.

அவர் சொல்வதை நான் முழுவதும் ஆதரிக்கிறேன்; தன் தாயின் தாலாட்டுப் பாட்டுக்களைக் கேட்டாக வேண்டிய பாக்கியம் அல்லது துர்ப்பாக்கியம் பெற்றிருக்கும் அத்தனை குழந்தைகளும் ஏகமனதாக ஆதரிக்கும் என்பது நிச்சயம்.

எல்லாக் குழந்தைகளுமே தாயாரின் தாலாட்டுப் பாட்டைக் கேட்டே தூங்கி விடுவதில்லை. தொட்டிலை ஆட்டும்போது அவற்றுக்கு இலேசாகத் தலை மயக்கம் ஏற்படுகிறது. தொட்டிலின் நான்கு கயிறுகளையும் பிடித்துக் கொண்டு குலுக்கி ஆட்டும்போதோ அவற்றின் பச்சிளம் உடலுக்கு அசதி ஏற்படவே களைப்படைந்து தூங்குகின்றன.

தாலாட்டுப் பாட்டு ஓரளவு தூங்க உதவி செய்கிறது. நல்ல பாட்டைக் கேட்டு அநுபவித்தும் குழந்தைகள் தூங்குகின்றன. ஆனால் எத்தனையோ குழந்தைகள் தாய் தாலாட்டுப் பாடப் பாட, தாங்களும் மேலும் மேலும் வீறிட்டுக் கதறுவதுண்டு. 'பாடியது போதுமே!' என்று சொல்கின்றன போலும்! சில குழந்தைகள் நாம் பாடும்போது நம் முகத்தை உற்று நோக்கிக் கொண்டேயிருக்கும். அதைக் கவனித்தால் "எதற்காகப் பாடுகிறாய்?" என்று கேட்பது போலிருக்கும்.

காதுக்கு இனிமையாக இருக்கும்படி அழகாகப் பாடினால் குழந்தைகள் கேட்டு அநுபவிக்கும் என்பதில் சந்தேகமில்லை. தவிர, வீட்டில் உள்ள மற்றவர்களுக்கும் தண்டனையா யிராது. ஆகையால் குழந்தைகளுக்காகத்தானே பாடுகிறோம் என்று அலட்சியமா யிராமல் நன்றாகப் பாடப் பயிற்சி செய்து கொண்டு குரலையும் நன்றாக வைத்துக்கொண்டு தாலாட்டுக்கள் பாட முயற்சி செய்வது நல்லது. பெண்களுக்குப் பாட்டுச்



சொல்லிக் கொடுக்கச் சரளி வரிசை ஆரம்பிக்கும்போதே இவற்றையும் சொல்லிக் கொடுக்கலாமே?

தமிழ்நாட்டில் எத்தனையோ வித பழைய காலத் தாலாட்டுப் பாட்டுக்கள் இருக்கின்றன. '...மன்னு புகழ் கௌசலை தன்...' என்பது போன்ற பக்தி பூர்வமான பாட்டுக்களைப் பாடுகிறோம். தவிர ஆழ்வார்களும் நாயன்மார்களும் கடவுளைத் தூங்க வைப்பதற்காகப் பக்தி பரவசத்துடன் பல பாடல்களைப் பாடியுள்ளார்கள். சங்கீத பிதாவான ஸ்ரீ புரந்தர தாஸர் 'ஜோ ஜோ ச்ரீ க்ருஷ்ண பரமானந்த...' என்று ஆரம்பிக்கும் பாட்டில் கண்ணனைக் கண்வளர்த்திப் பாடியிருக்கிறார். பாட்டின் ஓரிடத்தில் ''நீ நல்ல குழந்தை இல்லையா? உன்னைத் தூக்கி இடுப்பிலே வைத்துக் கொண்டிருந்தால் வீட்டு வேலையெல்லாம் யாருடா செய்வார்கள்?'' என்று கேட்டு, 'தூங்கம்மா, தூங்கு!' என்கிறார்.

தமிழைத் தவிர மற்ற இந்திய மொழிகளிலும் எத்தனையோ அழகான தாலாட்டுப் பாட்டுக்கள் இருக்கின்றன. மஹாராஷ்டிரத்தில் குழந்தையைத் தூங்கச் செய்வதற்காக ஒரு தேவதையைக் கூப்பிடுகிறார்கள். 'ஜீவதி மாதா' என்பவள் குழந்தைகளைத் தூங்கச் செய்யும் தெய்வமாம். அது தூங்காமல் பிடிவாதம் செய்யும் குழந்தையைத் தூங்கச் செய்வதற்காக ஓடி வருமாம். ''ஜீவதி மாதா — சாபேரா — ஆனா...'' என்று பாடுகிறார்கள்.

பஞ்சாபிலும் ''நித்திரா தேவியே! சீக்கிரம் வந்து குழந்தையை மடியில் எடுத்து வைத்துக்கொள்!'' என்று அழைக்கும் பாட்டுப் பாடுகிறார்கள். பஞ்சாபிகள் இராணுவ சேவையையே பரம்பரைத் தொழிலாகக் கொண்டவர்களல்லவா? தாலாட்டுப் பாட்டுப் பாடும் சகோதரி; ''என் தம்பியை என்னவென்று நினைத்தாய்? வீராதி வீரனுக்கும்!'' என்று பாடுகிறாள். ஹிந்தியைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் நித்ரா தேவியை உதவிக்கு அழைப்பார்கள். ஹிந்தியில் அமைந்துள்ள ஒரு பாட்டில் தாயார் ''நித்ரா தேவியே ஓடிவா, ஓடிவா'' என்று கூப்பிடுகிறாள். அந்த நவீன நித்திரா தேவி என்ன பதில் சொல்கிறாள், தெரியுமா? ''இதோ வருகிறேன். மோட்டார் வண்டியிலேறி வருகிறேன்'' என்கிறாள்.

சில மலையாளத் தாலாட்டுப் பாட்டுக்களைக் கேட்டபோது எனக்கே தூக்கம் வரத் தொடங்கியது. குழந்தையைக் கண்ணனாகவே மதித்துப் பாடும் ஒரு பாட்டு:

**அம்பாடி தன்னிலொரு**
**உண்ணியுண்டங்கனே**
**உண்ணிக் கருண்ணி**
**குழலுண்டங்கனே**
**உண்ணிக்கப் பேரு**
**உண்ணிக் கிருஷ்ணங்கனே**
**உண்ணி வயற்றத்துச்**
**சேரமுண்டங்கனே**
**உண்ணிக்கை இரண்டிலும்**
**வெண்ணெயுண்டங்கனே.**

.....

இந்தப் பாட்டைக் கேட்கும் எந்தக் குழந்தையும் சிரித்துக் கொண்டே தூங்கும் என்பதில் சந்தேகமில்லை. இன்னொரு பாட்டு. இதில் தாய் குழந்தையின் அழகை வர்ணித்துப் பாடுகிறாள்.

**ஓமனத் திங்கற் கிடாவோ — நல்ல**
**கோமளத் தாமரைப் பூவோ**

**பூவில் நிறைஞ்ச மதுவோ — பரி**
**பூர்ணேந்து தண்டே நிலாவோ**

**புத்தன் பவிழக் கொடியோ — செரு**
**தத்தகளு கொஞ்சும் மொழியோ**

**சாஞ்சாடி ஆடும் மயிலோ — மிருது**
**பஞ்சமம் பாடும் குயிலோ**

**துள்ளும் இளமான் கிடாவோ — சோப**
**கொள்ளும் தோற்றக் கொடியோ**

**ஈசுவரன் தன்னு நிதியோ — பர**
**மேசுவரி ஏந்தும் கிளியோ**

தாலாட்டுப் பாட்டு சொல்லிக் கொடுப்பதற்கென்று பள்ளிக்கூடங்கள் ஏற்பட்டால் இதுபோன்ற மற்ற மொழிப் பாடல்களையும் தெரிந்து கொள்ள வசதி ஏற்படும். அழும் குழந்தை ஏதாவது ஒரு பாட்டைக் கேட்டுத் தூங்கிப் போய் விடலாமல்லவா?



தாலாட்டுச் சங்கீதப் பயிற்சியை நாளடைவில் விரிவாகச் செய்யலாம். வீட்டுப் புருஷர்களைத் திருப்பள்ளி எழுச்சி செய்ய அலாரம் கடிகாரங்கள் இருக்கின்றன. ஆனால் அவர்களைத் தூங்கச் செய்யத் தாலாட்டுவதில்லை. அவர்களுக்குத் தூக்கம் வராமற் போனால் விளக்கைப் போட்டுக் கொண்டு இரவெல்லாம் துப்பறியும் கதைகளைப் படிக்கிறார்கள். இதனால் மற்றவர்களுக்குத் தூக்கம் வராமல் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. தூக்கம் வருவதற்கு வேலியைத் தாண்டும் ஆடுகளைக் கண்களை மூடியபடி கற்பனை செய்து பார்த்து அவற்றை எண்ண வேண்டும் என்பார்கள். ஜப்பானில் தூங்கச் செய்வதற்கென்று ஒரு ரிக்கார்டு விற்கிறார்களாம். அதில் காலி தகரப் பக்கெட்டில் 'டிங் டிங்' கென்று நீர் சொட்டுச் சொட்டாய் விழுகிற சத்தம் பதிவாகி யிருக்கிறதாம். இதைக் கேட்டால் தூக்கம் நிச்சயம் வரும் என்று உற்பத்தியாளர்கள் உறுதி கூறுகிறார்கள்.

கடைசியாக இன்னொன்று. குழந்தைகளைத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டுப் பாட ஆண்களையும் கற்றுக்கொள்ளச் செய்ய வேண்டும்!

# உயரும் வழி

தோட்டக்கார விசுவநாதன்



காட்சி — 1

இடம்: மோகன் வீடு.
காலம்: காலை.

[மோகன் காப்பி அருந்தியபடி இருக்கிறான். அவன் பக்கத்தில் அவன் மனைவி கமலம் நிற்கிறாள். அவள் மைத்துனன் சுந்தரம் பள்ளிக்கூடம் போவதற்குத் தயாராகிக் கொண்டே அவர்களிடையே நடக்கும் சம்பாஷணையைக் கவனிக்கிறான்.]

கமலம்: இது என்ன அக்கிரமம்? பதினைந்து வருஷமாக வேலை பார்க்கிறீர்கள்! அதே உத்தியோகத்தில்தான் இருக்கிறீர்கள். ஆனால் மூன்று வருஷம்கூட ஆகவில்லை. அந்த ராஜன் ஹெட் கிளார்க் ஆகிவிட்டான். உங்கள் ஆபீசில் கேள்வி முறையே இல்லையா?

மோகன்: அவன் அதிருஷ்டசாலி.

கமலா: அவனும் உங்களைப் போல பி. ஏ. தானே?

சுந்தரம்: கல்லெல்லாம் மாணிக்கக் கல் ஆகுமா ?

மோகன்: நீ சும்மா இருடா! கமலம், உன் தம்பிக்கு ரொம்பத்தான் இடம் கொடுத்திருக்கிறாய்.

கமலம்: அவன் உண்மையைத்தானே சொன்னான்! ஏதடா, வாழ்க்கையில் முன்னேறவேண்டுமே என்ற அக்கறை இருந்தால்தானே உங்களுக்கு?

சுந்தரம்: ஆமாம். அந்த ராஜன் மானேஜரை நன்றாய்க் காக்காய் பிடிக்கக் கற்றுக் கொண்டிருக்கிறான். அடிக்கடி அவரையும் அவர் மனைவியையும் தன் வீட்டுக்கு விருந்துக்கு அழைக்கிறான். அந்த மானேஜருக்கு நல்ல புத்தகங்கள் என்றால் உயிராம். அதனால் பிரகரமாகும் நல்ல புத்தகங்களை விலைக்கு வாங்கி அதில் நூறு ரூபாய் நோட்டு ஒன்றை வைத்து அவருக்குக் கொடுத்து விடுவானாம்.

கமலம்: பார்த்தீர்களா? எப்படிடா இவ்வளவு சீக்கிரமாக முன்னுக்கு வந்தான் ராஜன் என்று பார்த்தேன். இப்போதுதானே தெரிகிறது!

மோகன்: புஸ்தகத்தைத் தந்திருக்கலாம். ஆனால் அதில் நூறு ரூபாய் நோட்டை வைத்துக் கொடுக்கிறான் என்று எப்படிச் சொல்ல முடியும்?

சுந்தரம்: ராஜனுடைய தம்பி என் கிளாஸ் மேட் ஆயிற்றே. அவன்தான் சொன்னான். அதுவுமில்லாமல் மானேஜருடைய மனைவிக்கு விதம் விதமான 'ஹாண்ட் பேக்' என்றால் உயிராம். ராஜன் மனைவி ஐந்து பத்து ரூபாய் நோட்டுக்களை உள்ளே போட்டு அவளுக்கு வெகுமதி அடிக்கடி தருவாளாம்.

கமலம்: சரி, உங்க மானேஜரையும் அவருடைய மனைவியையும் உங்கள் பிறந்த நாள் என்று சொல்லிக் கூப்பிடுங்கள். ஒரு நல்ல புத்தகம், ஓர் அழகிய 'ஹாண்ட் பேக்' இவைகளையும் வாங்கிக் கொண்டு வாருங்கள்.

மோ: என் நூற்றைம்பது ரூபாய்ச் சம்பளம் இதற்குப் பற்றாது, கமலம். ஏனென்றால் புத்தகத்தில் நூறு ரூபாய் வைக்க வேண்டும். விருந்துக்குச் செலவு என்ன ஆச்சு? யோசித்துப் பாரு!

கமலம்: கடனோ, உடனோ வாங்கித்தான் செய்யணும். ஞாயிற்றுக் கிழமை அவர்களை விருந்துக்கு அழையுங்கள்.

காட்சி — 2

இடம்: மோகன் வீடு.

[மோகனுடைய மானேஜரும் அவர் மனைவி புஷ்பாவும் மோகன் வீட்டுக்கு வந்திருக்கிறார்கள். விருந்து அருந்தியபடி அவர்கள் மோகன் குடும்பத்துடன் பேச்சில் ஈடுபடுகிறார்கள்.]

மானேஜர்: ஏது, மிஸ்டர் மோகன், ரொம்பப் பணம் செலவு செய்திருக்கிறீர்கள் போலிருக்கிறதே, இந்தப் பிறந்த தினத்துக்கு?

மானேஜர் மனைவி புஷ்பா: பாதாம் ஹல்வா பிரமாதம் போங்கள். நீங்கள் செய்தீர்களா கமலம்?

கமலம்: ஏதோ தெரிந்த அளவுக்குச் செய்திருக்கிறேன்.

புஷ்பா: மிகவும் நன்றாக இருக்கிறது.

மானேஜர்: இது உங்கள் முப்பத்து மூன்றாவது வயது நிறைந்ததைக் கொண்டாட



ஏற்பாடு செய்த விருந்தல்லவா, இதற்கே இவ்வளவு செலவழித்தால், உங்கள் இருப தாவது பிறந்த தினத்தை இன்னும் வைபவ மாகக் கொண்டாடியிருப்பீர்கள்!

மோகன்: ஆமாம், சார்! எனக்கு இதி லெல்லாம் பிரியம் இல்லே. ஆனால் கமலந் தான் ஒற்றைக் காலில் நிற்கிறாள், கொண் டாடி ஆக வேண்டுமென்று.

கமலம்: பிறந்த தினத்துக்கு வெள்ளித் தட்டு, டபரா என்று பரிசு கொடுத்தால் இவர் வாங்கிக் கொள்ள மாட்டார். நல்ல புத்தகம் ஏதாவது தந்தால் போதும் என்பார்.

மானேஜர்: உங்களுக்குப் படிக்கும் ஆர்வம் உண்டா? எனக்குத் தெரியவே தெரியாதே. எனக்கும் நல்ல புத்தகங்களைப் படிப்பதில் அலாதிப் பிரியம். என் சிநேகிதர்களெல்லாம் என் விருப்பம் தெரிந்து புத்தகங்களைத்தான் வாங்கித் தருவார்கள். நம்ப ராஜன் போன மாதம்கூட மூன்று புத்தகங்களை வாங்கிக் கொடுத்தார்.

சுந்தரம்: மூந்நூறு ரூபாய்!

மானே: மூந்நூறு ரூபாயா? பத்துப் பதி னைந்து ரூபாய்தான் இருக்கும்.

மோகன்: சார், அப்படியென்றால், நீங்கள் இங்கு வந்த அறிகுறியாக இந்தப் புத்த கத்தை வாங்கிக் கொள்ள வேண்டும்.

(புத்தகம் தருகிறான்)

மானே: 'நாடோடிப் பாடல்கள்'! எனக்கு மிகவும் பிடிக்கும். மிக நன்றி. (அதைப் புரட்டிப் பார்க்க முயல மோகன் அவர் கவ னத்தைத் திருப்புகிறான்.)

மோகன்: சார், வித்தியாசமாக் எடுத்துக் கொள்ளா விட்டால் ஒன்று சொல்கிறேன்.

மானே: சொல்லுங்கள், பரவாயில்லே.

மோகன்: கமலம், ஒரு டப்பியில் பாதம் ஹல்வா போட்டு அம்மாவிடம் கொடுத் தனுப்பு.

மானே: ரொம்ப தாங்க்ஸ். உங்களுக்கு இருக்கட்டும்.

மோகன்: உங்களுக்காகவே கமலம் தயார் செய்தாள். மறுபடியும் நாங்கள் செய்து கொள்கிறோம்.

கமலம்: நானும் உங்களுக்கு ஒரு சிறு அன்பளிப்பு வைத்திருக்கிறேன். இதை மறுக் காமல் பெற்றுக் கொள்ள வேண்டும். (ஓர் ஹாண்ட் பேக்கைப் புஷ்பாவிடம் தருகிறாள்.)

புஷ்பா (அதைப் பெற்றுக் கொண்டு): அடே அடே.... எனக்கு ரொம்ப இஷ்ட மானது. எவ்வளவுக்கு வாங்கினீர்கள்?

கமலம்: விலேயைப் பற்றி என்னங்க? நீங்க எடுத்துக்குங்க.

புஷ்பா (பையைத் திறந்து பார்க்க அதில் ஐம்பது ரூபாய் இருக்கிறது. அதை எடுத்துக் கமலத்திடம் தருகிறாள்): பணத்தை இதில் வைத்து விட்டீர்களே! ஒரு வேளை நீங்கள் உபயோகப்படுத்திக் கொண்டிருந்த பையோ?

கமலம்: இல்லே, இல்லே. மறதியாக அதில் வைத்து விட்டேன் போலிருக்கிறது.

புஷ்பா: சரி, நேரமாகிறது. நாங்கள் வருகிறோம். போகும் போது ராஜன் வீட் டுக்குப் போக வேண்டி இருக்கிறது. இன் னொரு டிசைனில் ராஜன் மனைவி எனக்காக ஒரு பை வாங்கி வைத்திருக்கிறாளாம்.

மானே: நானும் இன்னும் இரண்டு புத்த கங்களை வாங்கி வைக்கச் சொன்னேன். அதை யும் பெற்றுச் செல்லலாம். வருகிறேன். மிஸ்டர் மோகன், விருந்துக்கு மிகவும் நன்றி.

காட்சி — 3

இடம்: மோகன் வீடு — காலம்: மாலே.

[மோகன் சற்றுக் கோபமாக வீற்றிருக் கிறான். கமலம் அவன் பக்கத்தில் நின்று கொண்டிருக்கிறாள்.]

கமலம்: பிறந்த நாள் விருந்துக்கு வந்து எட்டு மாதங்கள் ஆகிறது. இன்னும் உங் களுக்குச் சம்பள உயர்வு தரவில்லே, பார்த்தீர் களா ?

மோகன்: உன் பேச்சைக் கேட்டு இப்போது எனக்கு ஒரு முந்நூறு ரூபாய் கடன் ஆனது தான் மிச்சம்.

[சுந்தரம் வருகிறான். அவன் கையில் ஒரு பொட்டலம் இருக்கிறது.]

சுந்தரம்: அக்கா..... அந்த ஜவுளிக் கடைக்காரன் ரொம்பக் காரசாரமாகப் பேசி விட்டான். பணம் கண்டிப்பாய் வேணுமாம்.

மோகன் : என்ன வாங்கினாய் ?

கமலம்: அந்த மானேஜர் பெண்சாதிக்கு 'ஹாண்ட் பேக் வாங்கினேனே — முப்பத் தைந்து ரூபாய் - அந்தக் கடன்.

சுந்தரம்: இதைப் பார்க்கிறாயா?

கமலம்: கொண்டா, இப்படி வை. (சுந்தரம் அந்தப் பொட்டலத்தைக் கமலத்



# ஹெர்குலிஸ் வெறும் ஸைக்கிள் மட்டுமன்று —வாழ்நாள் முழுதும் உழைக்கும் ஓர் உறுதுணை



பெரிய தொழிற்சாலையொன்றில் பிட்டராக ராமதாஸ் வாழ்க்கையைத் துவக்கியகாலம் அது. நேரம் தவறாமல் வேலைக்குச் செல்ல உறுதுணையாக இருந்த தன் புது ஹெர்குலிஸ் ஸைக்கிளைக் குறித்து அளவிலாப் பெருமை அவனுக்கு.

தன் புத்தி கூர்மையினாலும், சாமர்த்தியத்தினாலும் மேன்மையடைந்துள்ள ராமதாஸ், இன்று சீனியர் போர்மனாக உத்தியோக உயர்வு பெற்றுள்ளார். அன்று போலவே இன்றும், நம்பிக்கைக்கு உகந்த அவர் ஹெர்குலிஸ் அவருக்கு இன்றியமையாத சேவை புரிந்துவருகிறது.

இந்தியாவிலேயே மிகப் பெரியதும், பல நவீன யந்திரங்கள் கொண்டதுமான தொழிற்சாலையில், மிக நுட்பமான முறையில் தயாராகிறது ஹெர்குலிஸ். ஸைக்கிள் தயாரிப்பில் உலகிலேயே மிகப் பெரிய ஸ்தாபனமான ட்யூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் லிமிடெட் (இங்கிலாந்து) ஸ்தாபனத்தின் பரந்த தொழில் நுட்ப அறிவும், நிறைந்த அநுபவமும் சேர்ந்து உருவாக்கிவரும் ஹெர்குலிஸ் ஸைக்கிள் நீடித்து உழைப்பதில் ஆச்சரியம் என்ன?

டி. ஐ. ஸைக்கிள்ஸ் ஆப் இந்தியா, மதராஸ்.

JWT.TIC/H/2440a



''டாக்டர்! பருமனைக் குறைக்க வேண்டி நீங்கள் சாப்பிடச்சொன்ன உணவைச் சாப்பாட்டுக்கு முன்னால் சாப்பிடலாமா, அல்லது பின்னால் சாப்பிடலாமா?''

இடம் தர. அவன் அதைப் பிரித்து அதிலிருந்து ஒரு ஹாண்ட் பாக்கை எடுக்கிறான்.)

மோகன்: என்ன அது?

கமலம்: உங்களைப் பற்றி உங்கள் மானேஜருக்கு நினைவு இருக்கிறதா, இல்லையா என்று அறிய ஒரு யோசனை செய்தேன்.

மோகன்: உன் முதல் யோசனை முந்நூறு ரூபாய்க்குப் பள்ளம் தோண்டியது. இந்த யோசனை எத்தனை ரூபாய்க்கு வெடி வைக்கப் போகிறது ?

கமலா: இன்னொரு அறுபது ரூபாய். வேறொரு கடையில் கடனுக்கு வாங்கி வரச் சொன்னேன்.

மோகன்: இப்போது எதற்கு மறுபடியும் ஹாண்ட் பாக் ?

கமலா: சின்ன மீனைப் போட்டுத்தான் பெரிய மீனைப் பிடிக்கணும் என்பார்கள். உங்கள் மானேஜர் மறந்து விட்டிருக்கலாம். அதற்காகவே இன்று என் பிறந்த நாள் என்று சொல்லி உங்கள் மானேஜரின் பெண்சாதியை விருந்துக்கு அழைத்திருக்கிறேன்.

மோகன்: இதுவும் நன்றாகத்தான் இருக்கிறது. இதைப் பற்றி ஒன்றுமே இது வரை சொல்ல வில்லையே?

கமலம்: ஆயிரம் குறுக்குச் சொல்வீர்கள். அவர்கள் இன்னும் அரை மணியில் வந்து விடுவார்கள். இன்னும் ரவாகேசரி செய்ய வேண்டியிருக்கிறது.

சுந்தரம்: பாதம் ஹல்வா வாங்கிக் கொண்டு வந்தது போல் இதையும் விலைக்கு வாங்கினால் என்ன?

கமலம்: ரவாகேசரி சுலபமாகச் செய்யலாம். தெரிந்த விஷயத்துக்கு ஏன் காசைக் கரியாக்க வேண்டும்?

மோகன்: எங்க ஆபீஸ் சேவகன் வருகிறானே. வாப்பா, முனியா......

(முனியன் ஒரு கவருடன் வருகிறான்)

—

முனியன்: இதை மானேஜர் உங்களிடம் கொடுக்கச் சொன்னார். வரட்டுங்களா?

[கவரை மோகனிடம் கொடுத்துச் செல்கிறான். மோகன் கவரை பிரித்துப் பார்க்கிறான். ஒரு காகிதத்தோடு மூன்று நூறு ரூபாய் நோட்டுகள் இருக்கின்றன.]

கமலம்: முந்நூறு ரூபாய்! எதற்கு அனுப்பி யிருக்கிறார்? கடிதத்தைச் சற்று உரக்கத்தான் படியுங்களேன்!

மோகன் (படிக்கிறான்): '' அன்புமிக்க மோகன் அவர்களுக்கு, வணக்கம். எனது மனைவி உமது மனைவியின் பிறந்த தின விழாவில் கலந்து கொள்ள முடியாமைக்கு வருத்தத்தைத் தெரிவிக்கச் சொன்னாள். எனக்குத் தாங்கள் அன்பளிப்புத் தந்த நாட்டுப் பாடல் புத்தகத்தில் ஒரு நூறு ரூபாய்த் தாளை மறதியாக வைத்து விட்டீர்கள் என நினைக்கிறேன். அன்று என் மனைவிக்கு அன்பளிப்புத் தந்த ஹாண்ட் பாக்கிலும் ஒரு ஐம்பது ரூபாய் மறதியாக வைத்திருந்ததும் உமக்கு நினைவிருக்கும். இதனால், உங்களுக்குப் பணக் கஷ்டம் இல்லாத அளவுக்கு ஆண்டவன் உங்களுக்குச் செல்வத்தை அளித்திருக்கிறான் என்பதை உணருகிறேன்.

உமது முயற்சியால் முன்னுக்கு வர வேண்டும் என்ற ஆர்வமே இல்லாமல் அதே குமாஸ்தா வேலையிலேயே நீங்கள் ஏன் இருக்கிறீர்கள் என்பதற்கு உமக்கு இருக்கும் பண வசதியே காரணம் என்று தெரியலானேன்.

வெகுமதிப் பொருள்களில் பணத்தை மறந்து வைப்பதை நிறுத்திக் கொண்டு உழைப்பிலே அக்கறையும் ஊக்கமும் காட்டி நீங்கள் உத்தியோகத்தில் முன்னேற முடியும் என்பதை அறிவுறுத்துகிறேன். ஏதோ, பணம் இருக்கு. உத்தியோக உயர்வு எதற்கு என்று நீங்கள் கருதுவதானால் அதுவும் சரி. உமது மனைவிக்குப் பிறந்த தினத்தை முன்னிட்டுச் சில ரூபாய் அன்பளிப்பும் தாங்கள் மறந்து என் புத்தகத்தில் வைத்துக் கொடுத்த நூறு ரூபாயும் ஆக முந்நூறு ரூபாய் அனுப்பியுள்ளேன். விருந்துக்கு அழைத்தமைக்கு நன்றி. வணக்கம்.''

கமலம் : அட கண்ணாவியே! நாமொன்று நினைக்க.....

சுந்தரம் : பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்காய் முடிந்தது என்று சொல்லு அக்கா !

மோகன் : இனி எந்த முகத்தோடு மானேஜரைப் பார்ப்பேன் ?

சுந்தரம் : நான் சொன்ன முகம்தான் இருக்கே ! அதோடு 'இஞ்சி தின்ற' என்பதையும் சேர்த்துக் கொள்ளுங்களேன் !

கமலம் : போடா, மண்டு !

மோகன் : அவனைக் கடிந்து என்ன பயன்? உன் யோசனையைக் கேட்டு நடந்தேனே, என்னைச் சொல்லு !

"உங்களை யாரோ தேடிக்கிட்டு வந்திருக்காங்க அப்பா." பெண்ணின் மொழி கேட்டுப் பேராசிரியர் தாம் படித்துக் கொண்டிருந்த தத்துவ நூலைத் தழைத்து, கண்ணாடி விளிம்புக்கு மேலே பார்வையை ஓட்டினார்.

'வணக்கம்' போட்டுக் கொண்டு நின்ற இரு ஜிப்பாதாரிகளுக்கு 'வாங்க' என்ற வரவேற்புக் கிட்டியது.

"சிதம்பரனார் இலக்கிய மன்ற நிர்வாகிகள் நாங்கள். வருகிற மாதம் கவிஞர் சொல்லழகன் நினைவு நாள் கொண்டாடப் போகிறோம். பெரிய விழாவாக நடத்தத் திட்டமிட்டிருக்கிறோம்."

"உட்காருங்கள்; சொல்லழகனா? கேள்விப்பட்டதே இல்லையே!"

"அதிகம் பேர்கள் கேட்காத குரல்தான். பாவம், மலர்ந்து மணம் பரப்பும் வயதில் அல்பாயுசில் போய்விட்டார். அவரது கவிதைத் தொகுதி இது வரை ஒன்று தான் வந்திருக்கிறது. மீதி இருப்பவற்றைத் திரட்டி வெளியிடுவது இவ்விழாவின் நோக்கம். அவர் காலமாகிச் சரியாக இருபத்து ஐந்து ஆண்டுகள் ஆகின்றன..."

"இது நூற்றாண்டு விழா கொண்டாடுகிற காலம். நீங்கள் கால் நூற்றாண்டு சம்பிரதாயத்தை ஆரம்பித்து வைக்கிறீர்களாக்கும். சரி, இதில் என் பங்கு என்ன.....?" என்று அவர்கள் எதிர்பார்க்கும் நன்கொடையைப் பற்றி உத்தேசமாக மனத்தில் கணிக்கத் தொடங்கினார்.



"இவ்விழாவுக்குத் தாங்கள் தலைமை வகிக்க வேண்டும்."

"என்னது? நானா? தமிழ்க் கவிஞரின் நினைவு விழாவில் எனக்கு இடமா? நையாண்டி போதும்!" என்றார் அவர்.

"தங்களைப் பற்றித் தாங்கள் அடக்கமாகப் பேசுவது தங்கள் உயர்ந்த பண்பைக் குறிக்கிறது. தாங்கள் ஒப்புக் கொள்ளாவிட்டால்கூடத் தங்களது செறிந்த இலக்கிய அறிவு நாங்கள் அறிந்ததே. முப்பது வருடங்கள் ஆங்கில இலக்கியத்தைப் பயின்றும் பயிற்றுவித்தும் மொழி வளத்தில் திளைத்தவர்கள். இக்கால் நூற்றாண்டுக் கவிஞரின் விழாவுக்குத் தங்களை விடத் தகுதி வாய்ந்தவர் யார்? தரம் கருதாமல் விளம்பரம் மட்டும் கருதியிருந்தால் ஒரு மந்திரியைத் தேடிப் போயிருக்க மாட்டோமா? தயவு செய்து நீங்கள் ஒப்புக் கொள்ளுங்கள்."

"ஆங்கில இலக்கிய அறிவு ஒரு புறம் இருக்கட்டும்; தமிழ் ஞானம் வேண்டாமா?"

"மீன் குஞ்சுக்கு நீந்தக் கற்றுக் கொடுக்க வேண்டுமா? தாங்கள் முனைந்தால் இது ஒரு பொருட்டா?"

பேராசிரியர் பிரமநாயகம் பின்னர் நினைத்தார். அவர்களது வேண்டுகோளுக்கு ஒப்புக்கொள்ளாமல் இருக்க முடியவில்லை.

"அவருடைய கவிதை நூல் ஒன்றை எனக்கு அனுப்பி வையுங்கள். பேச உதவியாக இருக்கும். இந்த விழாவினால் உங்களுக்கு நன்மையோ இல்லையோ! ஒரு தமிழ்க் கவிஞரது ஆற்றலை உணரும் வாய்ப்பு எனக்குக் கிட்டியிருக்கிறது!"

"நன்றி!"

பேராசிரியர் பிரமநாயகம் மதுரைக் கல்லூரியில் ஆங்கில மொழி இலாகாத் தலைவராகப் பணியாற்றிச் சமீபத்தில் ஓய்வு பெற்றவர். அரசாங்கத்தின் மொழிக் கோட்பாடுகளைக் கண்டு அவரது சுதந்திர மனம் புழுங்கியது. நாட்டின் நலத்துக்கு ஆங்கில மொழியின் அவசியத்தைப் பற்றி அடிக்கடி விமரிசனக் கட்டுரைகள் எழுதி வந்தார்.

சென்ற ஆண்டு திருப்பாவை — திருவெம்பாவை மகாநாடுகள் நாடெங்கும் நடைபெற்ற போது, ஆங்கிலப் பிரசங்கம் ஒன்று புரிவதற்காக ஆண்டாள் பாசுரம் படிக்கத் தொடங்கினார். அப்பொழுதுதான் அமிழ்தினும் இனிய தமிழ் இலக்கியத்தை இதுவரை நுகராத குறையைப் பெரிதும் உணர்ந்தார். தொடர்ந்து திருவாசகத்தை எடுத்தபோது சொக்கிப் போனார். ஞானோதயம் உண்டானவர் போல் உள்ளூர்த் தமிழ் வித்துவான் ஒருவரை அணுகி முறையாகத் தமிழ் நூல்களைக் கற்கத் தொடங்கினார். இப்போது அவரது ஓய்வு நாட்களில், அறிவு முதிர்ச்சி பெற்று, சமயத் தொடர்பை நாடும் வேளையில் தமிழ்த் தொடர்பும் ஏற்பட்டது.

'இன்றையத் தமிழ்க் கவிஞரிடம் பழைய புலவர்களது இலக்கிய மரபும் இல்லை; மேலை நாட்டுக் கவிஞர்களது கருத்துச் செறிவும் இல்லை. வெறும் வார்த்தைச் சிலம்பம்' என்ற கருத்தை முன்கூட்டியே திரட்டிக் கொண்டுதான் கவிஞர் சொல்லழகனின் ஏடுகளைப் புரட்டத் தொடங்கினார்.



நோக்க நோக்க, படிக்கப் படிக்க அவருக்கு ஆச்சரியம் மேலோங்கியது. கவிதைப் பண்பும் அழகுணர்ச்சியும் இட்லை நிலைநாட்டின. அதிலும் முப்பது வயதுக்குள் இத்தனை அமரச் சொற்களைப் புனைந்து சென்றிருக்கிறார்.

"இந்தக் காப்பியைச் சாப்பிடுங்க. அப்புறம் படிக்கலாம்." பேராசிரியரது மனைவி செவந்தியம்மாளது குரலோசை அவரை மண்ணுலகத்துக்கு அழைத்தது.

"அது என்ன புஸ்தகம்?"

"இந்தா, நீயே பாரு!" என்று சொல்லி விட்டுக் காப்பிக்குக் கவிதைப் பண்டமாற்று செய்தார்.

புத்தகத்தின் முகப்புப் பக்கத்தில் கவிஞரது படத்தைப் பார்த்ததும், 'யாரு, இவரு?' என்று கேட்டாள்.

"கவிஞர் சொல்லழகன். என்ன முழிக்கிறே?" என்றார் பேராசிரியர்.

"இல்லே பார்க்கிறேன்."

"கொண்டா, இப்படி! ஒரு கவிதை வாசித்துக் காண்பிக்கிறேன். கேளு. சட்டென்று சாகப் போறோம்னு தெரிஞ்சுதான் அப்படி 'லைப்—டைம்' பாடல்களை எழுதிட்டுப் போயிட்டான்!"

"என்னது, அவரு உயிரோடு இல்லையா?"

"செத்துக் கால் நூற்றாண்டு ஆச்சு. காதல் பிழம்பு என்று ஒரு கவிதை. என்ன நயம்?

**உருவான எழில் பெருக்கி மெய்**
**உள்ளொளிக்கும் பருவப் புன்னாய்**
**இறகடித்துச் சிலிர்த்த போது**
**ஏமனிலே ஏத்தி நிற்க**
**ஒருவெட்டு மின்னலிலே**
**உலகேற்கு மோனிபோல — உன்**
**குறுநகைச் சிந்தலிலே**
**கவியாகிக் காதலுற்றேன்.**
**ஆறவில்லை; தவிக்கின்றேன்; மைவிழியே!**
**படபடக்க இதயத்து என்பாலைத்**
**திரியாக்கிக் கனலாக்கித் தீய்க்காதே**
**தென்றலெனத் தழுவித்தா இன்பம்."**

பேராசிரியர் முடித்ததும் 'கல கல'வென்று முத்துச் சிதறும் சிரிப்பொலி.

"டாடி! அம்மாவுக்கு இந்த வயசிலே இப்படி ஒரு கவிதையை வாசித்துக் காண்பிக்கிறீயே. அவளுக்கு என்ன 'அண்டர்ஸ்டாண்டு' ஆகும்? அவள் கையிலே அனுபூதி கொடு." பெண் தாயாரை வம்புக்கிழுத்தாள்.

"எட்டி! எனக்குத் தமிழ் தெரியாதா?"

"தமிழ் தெரியும். கவிதையை அனுபவிக்கத் தெரியுமா?"

"என் வாயைக் கிண்டாதே! உங்க ஐயா சொன்ன பாட்டை உங்களைவிட ஒரு படி மேலே புரிஞ்சிக்கத் தெரியும்!"

"ஓ, மை காட்! டாடி, அம்மா வரியை மட்டும் இல்லே; வரிக்கு இடையிலும் படித்துப் புரிந்து கொள்ளுவாளாம்" என்று ஆங்கிலத்தில் சிந்தித்துத் தமிழில் கூறினாள் அவள், பேராசிரியர் பெண் என்பதை நிரூபிப்பது போல.

செவந்தியம்மாள் ஊஞ்சலில் ஊசலாடியபடி அன்றையத் தமிழ்த் தினசரியில் கண்ணோட்டம் விட்டாள். உலக நடப்பு விவகாரங்களை அறிந்து கொள்ள வேண்டும் என்பதைவிட அந்தப் படிப்பு பிற்பகல் தூக்கத்துக்குத் தூண்டுகோலாக இருக்கும் அனுஷ்டானமாகவே இருந்து வந்தது. ஆனால் இன்றைக்கு அச்செழுத்தைக் கண்டு மூடுகின்ற இமைகள்கூடத் தம் செயலை மறந்தன. அவளது மனம் அன்றையக் காலை உரையாடலில் நிலைத்து, கவிஞன் சொல்லழகன் என்ற சொல்லிலே சிறகு முளைத்து, பல்லாண்டுகளுக்கு முன்பு நடந்த நிகழ்ச்சிக்குப் பறந்தது.

செவந்தியின் தகப்பனாரான, திருநெல்வேலி கொக்கிரகுளம் வழக்கறிஞர் பூமிநாத பிள்ளைக்குச் சட்டப் புத்தகங்களை விடத் தமிழ் இலக்கிய நூல்களில் நாட்டம் அதிகம். தொழிலில் அதிக கவனம் செலுத்தும் அவசியம் இல்லாதபடி பரம்பரைச் சொத்து நிறைய இருந்தது. அவரது பாட்டனார் முன்னீர்ப் பள்ளம் சிவவடிவேலுப் பிள்ளை சைவத்திருமுறைகளைக் கற்றுணர்ந்த பண்டிதராக விளங்கி, இறுதியில் குடும்ப பந்தங்களை உதறி ஓர் ஆசிரமத் தோட்டம் ஸ்தாபித்து யோகியாகவே வாழ்ந்து சிவபதம் அடைந்தவர். அந்தப் பரம்பரையில் வந்த பூமிநாத பிள்ளைக்குத் தமிழ்ப் பற்று அதிகம். அவரது வீடான 'தென்றலம்பல'த்தில், 'இலக்கிய வட்டம்' ஒன்றை அடிக்கடி கூட்டுவிப்பார். சுற்றுப்புறத்திலுள்ள தமிழ் அறிஞர்கள், சமயப் பண்டிதர்களெல்லாம் ஆர்வத்துடன் வந்து உரையாடுவர். அதோடு 'வக்கீலய்யா கூப்பிடுறாகளே' என்று மரியாதைக்குச் சென்று செவி சாய்க்கிற கூட்

மும் உண்டு; 'கூட்டம் முடிந்ததும் கிடைக்கிற பலகாரம் ரொம்ப ருசி' என்று சொல் வளர்க்காத நாவிலே சுவை வளர்த்துச் செல்கின்ற உணவு ரஸிகர்களும் உண்டு.—இப்படி அந்த இலக்கியக் கூட்டத்துக்கு வரும் நபர்கள் பல ரகம்!

செவந்திக்கு இந்த மொழிச் சர்ச்சை யெல்லாம் புரியவே யில்லை. யாராவது பெரியவர்கள் வந்தால் பெண்ணை அறிமுகப்படுத்தி, ''தேவாரம் ஒன்று பாடம்மா'' என்று தந்தை பணிக்கின்ற போது பாடுகின்ற துதிப் பாடல்கள்தாம் அவளது தமிழ்த் தொடர்பு.

கூட்டத்தில் கலந்து கொள்ளும் முதியோர்களிடையே அபூர்வமாக ஒரு வாலிபன் தவறாது தோன்றிக் கொண்டிருந்தான். இந்துக் கல்லூரியின் மாணவர்கள் விடுதி வக்கீல் பிள்ளை வீட்டுத் தெருவில்தான் இருந்தது. எத்தனையோ மாணவர்கள் எப்படி எப்படியோ பொழுதைச் செலவழிக்கையில், இளைஞனது தமிழார்வம் கண்டு பூமிநாத பிள்ளை பரவசம் அடைந்தார். ஒரு முறை கூட்டத்தில், இலக்கிய வட்டத்தைப் பாராட்டித் தான் யாத்த வாழ்த்துப் பாடல் ஒன்றைப் பயந்து கொண்டே அடக்க ஒடுக்கமாக அரங்கேற்றினான். பழைமையை மட்டும் கண்ணை மூடிக் கொண்டு அநுபவிக்கின்ற அந்த இலக்கிய ஜாம்பவான்கள் கூட்டத்தில் அவனது கவிதை எடுபடவில்லையாயினும், இளைஞனது ஆர்வத்தை எல்லாரும் பாராட்டினார்கள். ''தம்பி செல்லையா, நிறையக் கவிதை எழுதய்யா'' என்று வாழ்த்தினார் வக்கீல்.

அவர்களது மகிழ்ச்சியைவிடத் தனது கவிச்சொல் செவந்தி செவிகளில் விழுகிறதா என்பதில்தான் அந்த இளைஞனுக்கு ஆர்வம் அதிகம். அவளுக்கு அவனது கவிதை புரியவில்லை; காதல் நோக்குப் புரிந்தது. பருவத்தின் நுழைவாயிலில் அடிபதித்து அதன் உணர்ச்சி ஓட்டங்களைப் புரிந்தும், புரியாத அரைகுறை நிலையில் ஏதோ மர்மமான கிளுகிளுப்பை மட்டும் இதயத்தில் ஏந்தி நிற்கின்ற செவந்திக்கு இளைஞனது பார்வையில் ஒரு புது அர்த்தம் தொனிக்கத்தான் செய்தது. தவிர, காலையிலும் மாலையிலும் வக்கீல் வீட்டைக் கடந்து செல்லும்போது துழாவும் அவனது கண் வீச்சு இனம் தெரியாத கவர்ச்சியை உண்டாக்கிற்று. இரண்டொரு தடவை பிள்ளைவாள் இல்லாதபோது வந்து விசாரித்த வாலிபன், எதையோ சொல்லத் துடிக்கின்ற மன ஓட்டத்தை அவனது முகக் கண்ணாடியில் அவளால் புரிந்து கொள்ள முடிந்தது.

அந்த மாதிரி ஒரு சந்தர்ப்பத்தில்தான் பிள்ளைவாளது முத்தொள்ளாயிரம் பிரதியைத் திருப்பி அவள் கையில் கொடுத்து ஏதோ சொல்ல விழையுமுன்னே வக்கீலய்யாவே வந்து விட்டார். அவன் அதிர்ந்து விட்டான். முத்தொள்ளாயிரம் ஏடுகள் சங்க காலத்தைப் படம் பிடித்தது போலவே, அதனுள் கிடந்த கடிதம் ஒன்று செல்லையாவின் மனக் கிடக்கையை அம்பலப்படுத்தி விட்டது.

''இந்தப் பயலுக்கு இடம் கொடுத்தது வம்பால்ல போச்சுது. காதல் கடுதாசு எழுதுறான். அதிலே கவிதை வேறே! விளக்குமாத்துக்குப் பட்டுக் குஞ்சலம். பாவிகள் கையிலே தமிழு படுற பாட்டைப் பாரு!''

வழக்கறிஞர் உலைக்கும் உள்ளத்தோடு, கொதிக்கும் சொற்களைக் கொட்டினார். கண்கள் உதிரம் உமிழ்ந்தன. பெண்ணையும் இட்டு உள்ளே போகச் சொன்னார். தீய வெஞ்சொல் செவி சுடச் செல்லையா பழி சுமந்து திரும்பி வந்தான்.

அதன் பின்னர் பூமிநாத பிள்ளை கால்கள் பூமியில் பாவவில்லை. தூரத்து உறவினனை எம். ஏ. படித்துக் கொண்டிருந்த பிரமநாயகத்துக்குச் செவந்தியை முடிபோட நிச்சயித்துத் தேதியும் குறித்து விட்டார். அத்துடன், ஹாஸ்டல் வார்டனைச் சந்தித்து என்ன சொன்னாரோ, அதற்குப் பிறகு அந்த இளங் கவிஞனை அந்தப் பக்கம் காண இயலவில்லை. செவந்தியைப் பொறுத்த வரையில் அவளது உள்ளத்தில் எந்த விதமான சலனமும் இல்லை. ஒரு நாள் அவளது தம்பி யாரோ கொண்டு வந்து கொடுத்தார்கள் என ஒரு வண்டுக் கடிதம் காண்பித்தான். அது செல்லையா இறுக்கிய கவிதைத் துணுக்கு —

மண் தாங்கா துக்கத்துடன்
புண் தாங்கும் இதயத்தில்
சொல்லும் சுமந்தேன், கல்லும் சுமந்தேன்
செல்லும் காலநடையில் கொல்லும்நின்
சிலை —

செவந்திக்குக் கலியாணமாகி ஒரு வருடம் ஆகி விட்டது. ஆயினும் அவள் இன்னும் புருஷன் வீட்டுக்குச் செல்லவில்லை. பெரியோர்கள் வற்புறுத்தலின் பேரில் பிரமநாயகம் சம்மதித்து விட்ட போதிலும் அவனுக்கு அந்த மணத்தில் விருப்பமில்லை. இலக்கிய எம். ஏ. படித்த தனக்கு மனைவி இன்னும் அறிவுத் துணைவியாக இருக்க வேண்டும் என விரும்பினான். அவளது அழகோ, அடக்கமோ அவனுக்குக் கவர்ச்சி ஊட்டவில்லை. கல்லூரியில் யாரோ ஒரு மாணவியைக் காதலித்ததாகக் கூடக் கேள்வி!

இந்த ஒரு வருடத்தில் செவந்தியின் உடலும், உள்ளமும் வளர்ந்து, வாழ்க்கையைப் பற்றி நன்றாகச் சிந்திக்கும் பக்குவம் பெற்றாள். தனது கைத் தலம் பற்றிய கணவனுக்குத் தன் மீது அன்பு சுரக்க வில்லை என்று உணர்ந்த போது அவளுக்குத் தலை இறக்கமாகவே இருந்தது. கல்லூரி மாணவனாகத் தனது விழிக் கடை வீச்சுக்குக் காத்துக் கிடந்த செல்லையாவின் நோக்கிலே காதற் கனிவு; தாம்பத்தியத்தின் வெற்றியோ, ஒருமையோ துணைவியின் அறிவாற்றலில்தான் இருந்தது என்று நம்பி அவளை அலட்சியம் செய்த கணவன் நினைவு; இதை எண்ணி எண்ணிச் செவந்தி உள்ளம் நைந்து உருகி விம்முவாள்.

ஒன்றரை வருடத்துக்கு மேல் பிரிவு நீடிக்கவில்லை. பிரமநாயகம் மதுரைக் கல்லூரியில் மாமனாரது சிபாரிசுடன் விரிவுரையாளராகப் பணியாற்றத் தொடங்கினான். பெரியவர்கள் தலையிட்டு, பையனைக் கண்டித்து, செவந்தியைக் குடித்தனம் வைத்து விட்டு வந்தனர். மூத்த பெண் காந்திமதி பிறக்கும் வரை தாம்பத்திய அன்னியோன்னியம் அப்படியும் இப்படியுமாகத்தான் இருந்தது. அதற்குப் பிறகு பிரமநாயகத்தின் இலட்சிய வெறி அடங்கி, வாழ்க்கையில் பிடிப்பு ஏற்பட்டது; மனைவியும் பிடித்து விட்டது.

ஊஞ்சலில் படுத்திருந்த செவந்தியம்மை பேராசிரியரும் பெண்ணும் அணுகுவது கண்டு எழுந்து உட்கார்ந்தாள்.

''காந்திமதி! கவிஞர் சொல்வழகனின் 'கவிதாதகோர்' படித்துப் பார். உண்மையிலேயே சில மிக உயர்ந்தவையாக இருக்கின்றன. கவிதைகளைப் புரிந்துகொள்ள உரக்கப் படிக்க வேண்டும். அச்சு யந்திரம் வந்ததிலே கவிதைத் துறைதான் பொலிவு இழந்து விட்டது!''

''என்னப்பா, அப்படிச்சொல்கிறீர்கள்?''

''கவிதையிலே இசை இழைந்திருக்கிறது. இசைச் சொற்களுக்கு இரு நிறம் உள்ளன. ஒன்று கருத்தின் நயத்தால் இருதயத்தைத் தொடுவது; மற்றொன்று ஓசை புரியும் ஜாலம். அச்சடித்த பக்கங்களிலிருந்து கண்விழிப் பாயும் சொற்கள் ஒலி நயமின்றிப் பாதி உயிரை இழந்து விடுகின்றன. வாய் விட்டுப் படித்தோமானால் செவிப்புலன் தனி உணர்ச்சியைத் தோற்றுவிக்கிறது. நம்முடைய காவியச் செல்வங்கள் வாய்வழிச் சுவட்டில் இத்தகைய தலைமுறையை அடைந்ததால்தான் அவை இன்னும் ஜீவனோடு இருக்கின்றன.... கவிஞர்




சொல்வழகனின் காதல் பாட்டு ஒன்றை உரக்கப் படித்தேன். நான் வாலிபனாகி விட்டது போல் உணர்ச்சி ஏற்பட்டது'' என்றார் பேராசிரியர் செவந்தியம்மையை விஷமத்துடன் பார்த்தபடியே.

* * *

கவிஞர் சொல்வழகனுக்கு அஞ்சலி செய்ய ரசிகர்கள் கூட்டம் நிறைய வந்திருந்தது. செவந்தியும் காந்திமதியும் சபையில் ஒன்றாக அமர்ந்திருந்தனர்.

பேராசிரியர் பிரமநாயகத்தின் தலைமையுரை ஆரம்பமாயிற்று.

''கவிதை என்பது அறிவின் நுட்பவுணர்ச்சி, மூச்சுக் காற்று என்கிறான் கவிஞன் வோர்ட்ஸ்வர்த். 'வித்தைப் பாடல்கள் வியாத் திறத் தலை. வீசி உலகிலே வியன் நகர் கட்டுவோம்' என்று கற்பனைக் கவிஞன் ஓஷோனிக் பாடுகிறான். கவிஞர் சொல்வழகனின் சந்தம் ஸ்தாபிக்கும் பேராக அந்தம் மிகுந்தது; வார்த்தைகள் உணர்ச்சிகளைச் சுமந்து வருகின்றன. பிரௌனிங்கின் வேகத்தையும், நாடகப் பண்பையும் சொல்வழகனின் சொல்லோவியங்களில் காண்கிறோம்.

மாத்யூ ஆர்னல்ட் கூறியது போலக் கவிதையின் தனிச் சிறப்பு என்பது பொருள்களை வருணிக்கும் ஆற்றலில், நம்மைத் தட்டி எழுப்பி, வியப்பையும் புதிய உறவையும் நெருக்கத்தையும் தூண்டுகிற சக்தியில்தான் இருக்கிறது. துருப் பிடித்த நமது இதயத்தைக் கற்பனைத் தீயிலே தோய்த்துத் தோய்த்து, சொல் சந்தம் என்ற சம்மட்டி கொண்டு அடித்து உருவாக்கு

கிறான், கவிதைக் கொல்லன். நெஞ்சை ஆடு பிடித்துக் கனல்கிறது. சேற்றிலே உயிர்த்துக் கிடந்த நமது உள்ளம், உணர்ச்சி பெற்று, சௌந்தரிய உலகைத் தொடுகிறது. கவிஞர் சொல்லழகனின் கவிதைகள் இந்த வேலைகள் அனைத்தையும் செய்கின்றன.

அவருடைய வரலாறு முழுவதையும் அறிந்தவர் இல்லை. ஆனால் சோகத்தின் நிழல் அவரது கவிதைச் சரத்திலே படிந்து கிடக்கிறது. பாடல்களில் 'மெலோன்கலி' ஒலிக்கிறது. காதல் போன்ற நிகழ்ச்சிகளில் நிறைவேறாத ஏக்கம் அவரது கவிதைகளில் தொனிக்கிறது. 'உன்னைக் கவிதையாக நுகர நினைத்தேன். நீ என்னைச் சோகக் கடலில் ஆழ்த்திக் கவிஞனாக மாற்றி விட்டாய்' என்று ஒரு பாடலில் கூறுகிறார். அவருக்கு அக்காதலி கிட்டியிருந்தால் மனம் நிறைவு பெற்று, மேலும் பல கவிதைகள் இயற்றியிருப்பார். காதல் பிழம்பு என்ற பாடலில் அவரது காதலியை விவரிக்கிறார். 'ஒரு வெட்டு மின்னலிலே உலகேற்றும் ஒளி போல உன் குறுநகைச் சிந்தலிலே கவியாகிக் காதலுற்றேன்' என்ற வரிகளைப் படிக்கும் போது காதல் பெண்ணொருத்தி முழு வனப்புடன் நம் முன்னே தோன்றுகிறாள். கவிஞர் கண்ட காதலியை நாமும் காதலிக்கத் தொடங்குகிறோம். இறுதியில் காதலில் தோல்வி அடைந்து 'புண் தாங்கிய இதயத்தில் சொல்லும் சுமந்தேன்; கல்லும் சுமந்தேன்; செல்லும் கால நடையில் கொல்லும் நின் நினைவு' என்ற சோக வரிகளைப் படிக்கும்போது கவிஞனது காதலியின்பேரில் கோபம் ஏற்படுகிறது....''

பேராசிரியரது பேச்சு முடிவுற்றது. கர கோஷம் வானைப் பிளந்தது. செவந்தி கேட்டுக்கொண்டே இருந்தாள். உடல் முழுவதும் வியர்த்தது. 'கவிஞன் கண்ட காதலியை நாமும் காதலிக்கத் தொடங்குகிறோம்' என்ற சொற்கள் வீறு கொண்டு அவள் நெஞ்சைத் தாக்கின.

இன்று கவிஞன் சொல்லழகனுக்குப் புகழ்ச்சிக் கோபுரம் எழுப்பிக் கொண்டிருக்கிறார்கள். பாட்டிலே அவன் 'காதல்' என்று கூறும்போது அதனை ரசிக்கிறது உலகம். அன்று செல்லையாவாக அவன் காதலிக்க முற்பட்டபோது அவன் மேல் சீறிப் பாய்ந்தது. இந்த மேடையில் சொல்லழகனை வானளாவ உயர்த்திப் பேசும் பேராசிரியர்கள் அவன் தான் செல்லையா என்பதையோ, அவனது கவிப்பொருள், கவிதைத் தலைவி செவந்தி என்பதையோ அறிவாரா? அப்படி உணர்ந்திருந்தால் அவனது கவிதையை அவர் கண மேலும் ரசிப்பாரா? 'அவனுக்கு மட்டும் அவள் கிட்டியிருந்தால்...!' என்ன விசித்திரமான சிந்தனை.

இளம்புரியாத வயதில் அவனது காதலும் கவிதையும் தன்னைத் தீண்டியபோது அதன் முழுச் சக்தியையும் தன்னால் உணர முடியவில்லை. ஆனால் அவன் காதல் தைத்து காலப் புழுதியின் நடுவிலே சொல்லாலே தனக்கு எப்போர்ப்பட்ட நிரந்தரச் சின்னம் ஒன்றைக் கட்டிச் சென்றுவிட்டது!

கிட்டத்தட்ட செல்லையா தன்னைக் கண்ட பருவத்தில்தான் பிரம்மநாயகமும் தனது கைத்தலம் பற்றினார். கோலக் கவிதைப் பொருளாய்ச் செல்லையாவுக்கு இருந்த தன்னை மணக்கோலத்திலும் ஆசிரியரால் ரசிக்க முடியவில்லை. தன்னை அலட்சியப் படுத்தி ஓர் ஆண்டுக்கு மேல் ஒதுக்கி வைத்து விட்டார். ஊனும் சதையும், உயிரும், ஓட்டமும், எழிலும், பொலிவுமாய் நின்ற தன்னைக் காதலிக்கவில்லை. இன்று கவிதைப் பிழம்பிலே தோன்றும் செவந்தியின் நிழலைப் போற்றுகின்றார். உலக வாழ்க்கையின் விந்தை தான் என்ன!...

செவந்தி கண்ணீர் விட்டாள்.

''அம்மா, கண்ணீர் வடிக்கிறாயா? கவிஞரின் கவிதையை ஒருபடி மேலாகவே புரிஞ்சுக் கிட்டியா?'' பெண்ணின் ஏளனக் குரல் அன்னைக்கு விழிப்பூட்டியது.

''வாஸ்தவம்தான்; அவன் கவிதையை நல்லாப் புரிஞ்சுக்கிட்ட ரசிகை நான் ஒருத்தி தான். ஆனால் அவன் கவிதைக்காகக் கண்ணீர் வடிக்கவில்லை. உளம் சாம்பிச் செத்த கவிஞனுக்காக வருத்தப்படறேன். வாழ்க்கையிலே அழகுணர்ச்சியைத் தூண்டக் கவிஞன் அவசியம். கண்ணிருந்தும் காணாத குருடர்களுக்கு அவனது சொல் தான் கைத்தடி.''

விழா முடிந்தது. அன்று எத்தனையோ அபிமானிகள் கவிஞனுக்கு அஞ்சலி செய்தனர். ஆனால் செவந்தி அந்த ரசிகர்கள் கூட்டத்தில் தனித்து நின்றாள்; ஆனால் கவிஞனின் உணர்ச்சியுடன் ஒன்றாகி நின்றாள்; இல்லை, கவிப் பொருளாகவே கலந்திருந்தாள்.




# குடும்பச் சித்திரம்

குதூகலம் நிரம்பி வழியும் குடும்பப் புகைப்படங்கள் நிறைந்த புத்தகம் இது. இதில் காணப்படும் கடைசி இரண்டு படங்களிலும் நீங்கள் இருக்க விரும்புவது இயற்கையே. ஒரு வேளை நீங்கள் இல்லாது போயின் அந்தக் கடைசி இரு படங்களும் இப் புகைப் படப் புத்தகத்தில் இடம் பெறாமல் போகுமல்லவா ?

இப்படி நிகழ்வதை நீங்கள் நிச்சயம் விரும்பமாட்டீர்கள் என்பதை நாங்களறிவோம். என்றும் நாளை என்ன நடக்கும் என்பதை யாரால் சொல்லமுடியும் ? முன் யோசனையுள்ள எல்லா மனிதர் களைப் போலவே மேற்படி புகைப்படங்களில் பங்குகொள்ள நீங்கள் இல்லாது போயினும்கூட அத்தகைய புகைப்படங்கள் எடுப்பதற்கான வழிவகைகளைச் செய்தாக வேண்டும்.

உங்கள் தொல்லைகளில் உங்களுக்கு என்றும் கைகொடுத்து உதவுவது ஆயுள் இன்சூரன்ஸ். உங்கள் மகனின் கல்விச் செலவா, மகளின் கல்யாணச் செலவா, எதற்கும் சந்தர்ப்பத்தை நம்பியிருக்கவேண்டாம். உங்களுடைய மாதாந்திர வரவுசெலவுக் கணக்கில் ஆயுள் இன்சூரன்ஸ் பிரீமியங்களுக்கு முதலிடம் தந்து அதனைத் தொடர்ந்து செலுத்திவாருங்கள். இதற்குப் பிரதி பலனாக உங்கள் பொறுப்புகளில் ஆயுள் இன்சூரன்ஸ் பங்கேற் கின்றது. நீங்கள் நல்ல உடல் நலத்துடன் சம்பாதித்துக் கொண்டிருக்கும் இன்றே இன்ஷ்யூர் செய்துகொள்ளுங்கள்.

## ஆயுள் இன்சூரன்ஸ்

போல ஆதரவு தருவது எதுவுமே இல்லை

# நிமிஷக் கதைகள்

## ஆபத்துக்கு அஞ்சாதவன்



மார்க் ட்வைன் காலத்தில் நடந்த கதை இது. அந்தக் காலத்தில் ஏதாவது கருத்து வேற்றுமை ஏற்பட்டால் அதைத் தீர்த்துக் கொள்ளத் துப்பாக்கி அல்லது வாளின் உதவியையே மக்கள் நாடி வந்தனர். மார்க் ட்வைனிடம் அதிருப்தி கொண்ட ஓர் ஆங்கிலேயன் அவரைத் துப்பாக்கிச் சண்டைக்கு அழைத்தான்.

அவன் அறைகூவலை ஏற்ற மார்க் ட்வைன் ''என் கை பேனா பிடித்த கை, வாளோ துப்பாக்கியோ பிடித்த கையில்லை. இந்த இரண்டு முறையிலும் நான் கட்டாயம் தோற்று விடுவேன். வெற்றி — தோல்வியை நிர்ணயிக்க வேறு ஒரு வழி சொல்லுகிறேன். அதன் மூலம் நம் வீரத்தையும் தைரியத்தையும் பரீட்சித்துவிடலாம்!'' என்றார்.



''என்ன?''

''இரண்டு 'டிரம்'களில் வெடி மருந்தை நிரப்ப வேண்டியது. ஒரே தூரத்தில் அதன் திரியை அளவாக வைக்க வேண்டியது. நாம் இருவரும் ஒவ்வொரு 'டிரம்'மில் உட்கார்ந்ததும் மூன்றாமவன் இரண்டு திரிகளையும் ஏககாலத்தில் கொளுத்தி விட வேண்டும். வெடித்தாலும் வெடிக்கட்டும் என்று யார் பயமில்லாமல் உட்கார்ந்திருக்கிறாரோ, அவரே ஜெயித்தவராவார்!'' என்றார்.



எதிராளி சம்மதித்து விட்டான். மறுநாள் மார்க் ட்வைன் சொன்னது போலவே, இரண்டு டிரம்கள் தயாரிக்கப்பட்டு இருவரும் உட்கார்ந்தார்கள். திரியில் தீயும் வைத்தாகி விட்டது.

திரி 'பசபச'வென்று பிடித்துக் கொண்டு முன்னேறி வருவதைக் கண்ட ஆங்கிலேயன் எழுந்து நடு நடுங்கி ஓடிவிட்டான். மார்க் ட்வைனோ ஒரு பாட்டை முணுமுணுத்த வண்ணம் உட்கார்ந்திருந்தார்.

தூரப் போய் நின்று கொண்டு, 'எப்படி இருந்தால் என்ன? அவர் சாகப்போகிறார்' என்ற எண்ணத்துடன் வேடிக்கை பார்க்கலானான்.



திரி 'டிரம்'முக்கு அருகில் வந்ததும் அணைந்து விட்டது. கூடியிருந்த மக்கள் மார்க் ட்வைனைப் பார்த்து, ''உங்களுக்கு எப்படித் தெரியும், டிரம் வெடிக்காதென்று!'' என்று கேட்டார்கள்.

''ஆபத்தில் அஞ்சாதவன்தான் ஐயா தீரன், வீரன், வெற்றி கொண்டவன் எல்லாம். என்னை மீறி இந்த டிரம் வெடித்துவிடுமோ?'' என்று கேட்ட மார்க் ட்வைன் டிரம்மைப் புரட்டினார். வெடி மருந்துக்குப் பதிலாக வெங்காயச் சருகுகள் அதில் கிட்டிக்கப்பட்டிருந்தன!

* * *

மாமா: ராமு! ஆண்டவனிடம் நீ ஏதாவது வேண்டிக் கொண்டதுண்டா?

ராமு: உண்டு, சார்! நிறையப் பணமும் காசும் கொடு என்று வேண்டிக் கொள்வேன்.

மாமா: நானாயிருந்தால் என்ன வேண்டிக் கொள்வேன், தெரியுமா? நல்ல புத்தியைக் கொடு என்று வேண்டிக் கொள்வேன்.

ராமு: நியாயந்தானே, சார்! யார் யாரிடம் எது எது இல்லையோ, அதைத்தானே வேண்டிக் கொள்வார்கள்?

* * *

ஹங்கேரியாவில் உள்ள லோலா டொப்ரீச் என்ற சர்க்கஸ் பெண் கயிற்றில் நடந்து வித்தை காட்டுவதில் புகழ் பெற்றவள். இவள் கர்ப்பமாகி ஏழு மாதங்கள் வரை வித்தை காட்டி வந்தாள்! பிறகு டாக்டரை அணுகி உடலைச் சோதித்துப் பார்க்கும்படி கூறினாள்.

பரிசோதித்த டாக்டர், ''நீ, என்ன வேலை செய்கிறாய்?'' என்று கேட்டார்.

''கயிற்றில் நடப்பது.''

''ஓகோ, அப்படியானால் நாளையிலிருந்து அந்த வேலையை நிறுத்திக் கொள்!''

''ஏன், இன்று மட்டும்....''

''இன்று மாலைக் காட்சிக்கு நான் டிக்கெட் வாங்கி விட்டேன்!''

* * *

ராமு: சார்! உங்கள் புத்தகத்தைக் கொஞ்சம் தருகிறீர்களா? படித்து விட்டுத் தருகிறேன்.

சோமு: தருகிறேன். ஆனால் இங்கேயே படிக்க வேண்டும்.

சோமு (சில நாட்கள் கழித்து): உங்கள் மண்வெட்டியைக் கொஞ்சம் தர முடியுமா?

ராமு: தாராளமாகத் தருகிறேன். ஆனால் ஒன்று. எங்கள் தோட்டத்தில்தான் நீங்கள் கொத்த வேண்டும்.

* * *

மாணவன்: ஒருவன் செய்யாத காரியத்துக்குத் தண்டனை கொடுக்கலாமா?

உபாத்தியாயர்: கூடவே கூடாது.

மாணவன்: நான் பாடம் எழுதவில்லை, சார்!

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

## உங்களுடைய கேசம் ஆரோக்யமாகவும் பளபளப்புடனும் விளங்கும்

# பிரில்க்ரீம்

தடவி நேர்த்தியாக தலையை வாரிக்கொண்டால்!






**பிரில்க்ரீம் மட்டுமே**

- அதிக எண்ணைப்பற்று இல்லாமலும், தாறுமாறாக உரோமம் கலையாமலும் நேர்த்தியாக தலையை வார உங்களுக்கு உதவுகிறது.
- மிகவும் சிக்கனமானது—ஒருமுறை தடவி வாரிக்கொண்டால் நாள் முழுவதும் உங்கள் தலை கலையாது அழகாக தோற்றமளிக்கும்.
- உரோமம் உதிர்ந்து வழுக்கை விழாமல் தடுக்கக்கூடிய, ஆரோக்யமான உரோம வளர்ச்சியைத் தூண்டக்கூடிய, நேர்த்தியான கலவை வாய்ந்தது.
- உங்களுடைய கேசத்தின் இயற்கையான வண்ணத்தைப் பாதுகாக்கிறது.

**எனவே இனிமேல் பிரில்க்ரீமையே உபயோகியுங்கள்!**

**உலக முழுவதிலும் லக்ஷக்கணக்கான நேர்த்தியான மனிதர்கள் இதையே உபயோகிக்கிறார்கள்**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon